● ஸிந்துஜா ● சில்வியா பிளாத் ● டி. கண்ணன் ● பியட்றிஸ் லம்வாகா ● எம். ரிஷான் ஷெரீப் ● ஷங்கர்ராமசுப்ரமணியன்
● ஜெகநாத் நடராஜன் ● லக்ஷ்மி மணிவண்ணன் ● பூமா ஈஸ்வரமூர்த்தி ● மாலதி மைத்ரி ● விட்டல்ராவ் ● அ. ராமசாமி
● பாவண்ணன் ● நடேசன் ● வைதீஸ்வரன்



# அம்ருதா
AMRUDHA


வேள்வி 14 கலசம் 165
Volume 14 Issue 165

அக்டோபர் 2020 ரூ. 25
October 2020 Rs.25

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்
A Monthly Magazine of Art, Literature and Social criticism


## கொரோனா தரும் எச்சரிக்கை

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்



Rs. 140



Rs. 130



Rs. 170



Rs. 110



Rs. 200



Rs. 100



Rs. 80



Rs. 90



Rs. 90

**அம்ருதா**
#1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 மூன்றாவது முக்கிய சாலை 2ஆம் விரிவாக்கம்,
சி. ஐ. டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035
தொலைபேசி: 73387 57878, 94440 70000,
**மின்னஞ்சல்:** info.amrudha@gmail. com, **இணையதளம்:** www. amruthamagazine. com

கேள்வி 14 கலசம் 165

# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

அக்டோபர்-2020 விலை ரூ. 25

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**

ஆலோசனைக் குழு
ஓவியம்: **சந்ரு**
மனநலம்: **டாக்டர் மா. திருநாவுக்கரசு**
வரலாறு: **பொ. வேல்சாமி**
மொழிபெயர்ப்பு: **நாகரத்தினம் கிருஷ்ணா**
திரைப்படம்: **விட்டல்ராவ்**
கல்வி: **பேரா. தியாகராஜன்**
அறிவியல்: **பத்ரி சேஷாத்ரி**
இலக்கியம்: **தேவேந்திரபூபதி**
நாடகம்: **அ. ராமசாமி**
ஊடகம்: **இளைய அப்துல்லாஹ்**
சூழலியல்: **மோகன்ராம்**
இசை: **ரவிசுப்பிரமணியன்**
விளையாட்டு: **ஆர். அபிலாஷ்**
தற்கால நிகழ்வுகள்: **செ. சண்முகசுந்தரம்**
அரசியல்: **மருதன்**

வடிவமைப்பு: **பிரபாகரன்**

**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

* அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்

# கொரோனா தரும் எச்சரிக்கை!

**பிரபு திலக்**

உலகம் மீண்டும் ஒரு கொள்ளை நோயை எதிர்கொண்டுள்ளது; ஒன்பது மாதங்கள் கடந்துவிட்ட பின்னரும் என்ன செய்வது, இதனை எப்படி எதிர்கொள்வது என்று தெரியாமல் அமெரிக்கா, ஜெர்மன், இத்தாலி, பிரான்ஸ், கனடா போன்ற பல முன்னேறிய நாடுகளே திகைத்து நிற்கின்றன. கொரோனாவுக்கு தடுப்பூசி கண்டுபிடிக்கும் முயற்சியில் பல நிறுவனங்கள் அடைந்துள்ள முன்னேற்றம் நம்பிக்கை அளித்தாலும், அந்த தடுப்பூசிகள் சோதனை முழுமையாக வெற்றியடைந்து, அனைவருக்கும் அதன் பலன் சென்று சேரும்வரை, நாம் கொரோனாவுடன்தான் வாழ்ந்தாக வேண்டும்.

இதனை எழுதும் நேரத்தில் உலகம் முழுவதும் அதிகம் பாதிப்புக்கு உள்ளான நாடுகள் பட்டியலில் 2ஆவது இடத்தில் இருக்கிறது இந்தியா. இதனை நீங்கள் படிக்கும்போது முதலிடத்திற்கு இந்தியா முன்னேறி இருக்க வாய்ப்புண்டு. ஏனெனில், இந்தியாவின் மக்கள் தொகை பெருக்கம், அலட்சியம் போன்றவை வேகமாகப் பரவுவதற்கு கிருமிக்கும் அதிக வாய்ப்புகளை அளிக்கிறது

கொரோனா கிருமி மருத்துவ உலகத்துக்கு புதியதல்ல. 1950லேயே கண்டுபிடிக்கப்பட்ட கொரோனா குடும்பத்தின் புதிய வடிவம்தான் கோவிட் 19 எனப்படும் தற்போதைய கிருமி. இது முதலில் எங்கு தோன்றியது, எப்போது தோன்றியது என்பதில் சர்ச்சைகள் உள்ளன. கடந்த ஆண்டு நவம்பரில் இது சீனாவில் வுகான் மாகாணத்தில் தோன்றி அங்கு உள்ள கடல் உணவு விற்பனை சந்தையில்தான் பரவியது என்று சொல்லப்படுகிறது; ஆனால், லாரி ரமனோஃப் என்பவரின் ஆய்வு முடிவு கொரோனா கிருமி அமெரிக்காவில்தான் உருவானது என்கிறது. அமெரிக்காவில் இன்ஃப்ளூயென்சா கொள்ளை நோய்ப் பரவலில் 14,000 பேர் இறந்தது கோவிட்19 கிருமியால்தான் என்றும் சொல்லப்படுகிறது.

கோவிட்19 தோற்றம் பற்றிய சர்ச்சைகள் ஒருபக்கம் இருக்க, இன்று இந்த கிருமி உலகம் முழுவதும் பரவிவிட்டது. அனைத்து நாடுகளும் பாதிப்புக்கு உள்ளாகியுள்ளன. உயிரிழப்புகள் ஒருபக்கம் இருக்க உலகப் பொருளாதாரம் பெரும் ஆட்டத்தைக் கண்டிருக்கிறது. குறிப்பாக, இதுபோன்ற கொள்ளை நோய் பரவலின்போது வருமானம் குறைந்த நிலையில் உள்ள ஏழை மக்களே பல்வேறு வகைகளில் பாதிக்கப்படுவதுபோல் தற்போதும் நிகழ்கிறது. ஒருவேளை அவர்கள் நோய்த் தாக்குதலிலிருந்து தப்பித்தாலும் அன்றாடம் வாழ்வாதாரம் பாதிக்கப்படுவதால் குடும்பத்தோடு துன்புறும் நிலை ஏற்பட்டுள்ளது.

இந்த அளவு நிலை மோசமானதற்கு நோய் பரவல் ஒரு காரணம் என்றால், இன்னொன்று ஆரம்ப கால வதந்திகள். உண்மையில் ஆரம்ப வதந்திகளில் சொல்லப்பட்ட அளவு அச்சப்பட்டிருக்க தேவை யில்லை என்பது தற்போது உறுதியாகியுள்ளது. கோவிட் 19 கிருமி பாதிப்புக்கு உள்ளானவர்களில் 96 சதவிகிதம் பேருக்குக் குணமாகி உயிர் பிழைக்கும் வாய்ப்பு உள்ளது. தற்போது உலகம் முழுவதும் பாதிக்கப்பட்டவர்களில் பெரும்பான்மையினர் குணமாகி இயல்பு வாழ்க்கைக்குத் திரும்பிவிட்டார்கள். அதிலும் பெரும்பான்மையினருக்கு மிக லேசான பாதிப்புதான். பாதிக்கப்பட்டவர்களில் ஐந்து சதவிகிதம் பேர் மட்டுமே தீவிர சிகிச்சை தேவைப்படும் நிலைக்கு ஆளாகி இருக்கிறார்கள். இதில் பெரும்பான்மையோர் குணமாகி இயல்பு வாழ்க்கைக்குத் திரும்பிவிட்டார்கள்.

கோவிட் 19 போலவே உலகில் மருந்து கண்டுபிடிக்கப்படாத பல வியாதிகள் இருக்கின்றன. குறிப்பாக சமீபத்தில் நாம் சந்தித்த டெங்கு அப்படிப்பட்டதே. எனவே, பீதியடைய வேண்டாம். கொரோனாவுக்கான சிகிச்சை என்பது பாதிப்பைப் பொறுத்தது; நோயைப் பொறுத்தது அல்ல. எனவே, நடைமுறையில் உள்ள சிகிச்சைகளே போதுமானது. கோரோனா இதற்கு முன்னும் பலமுறை மனிதர்களைத் தாக்கி இருக்கிறது. மனிதர்களுக்கு வரும் மூன்றில் ஒரு பங்கு சளிக் காய்ச்சலுக்கு கொரோனா கிருமியே காரணம். இப்போதும் குழந்தைகள், கர்ப்பிணிப் பெண்கள் போன்றவர்களிடம் பாதிப்பின் வீரியம் குறைவே. ஐந்து வயதுக்கு உட்பட்ட பாதிப்புக்குள்ளான குழந்தைகளில் உயிர் பிழைக்கும் சதவிகிதம் 99.1 என்பது குறிப்பிடத்தக்கது.



ஆனால், அதற்காக நாம் அலட்சியமாக இருந்துவிடவும் முடியாது. மற்ற கிருமிகளைவிட கோவிட்19 கிருமி வேகமாக பரவக்கூடியதாக உள்ளது. உலகமயமாக்கலால் உலகமே கிராமமாக சுருங்கிவிட்ட இன்றைய சூழல் அதற்கு இன்னும் வசதியாக உள்ளது. விமானத்தில் பயணிக்கும் ஒருவருடன் இந்த கிருமியால் 24 மணி நேரத்திற்குள் உலகின் எந்த ஒரு மூலை யிலிருந்து இன்னொரு மூலைக்குச் சென்று மீண்டும் காலபதித்துவிட முடியும். ஆனால், நம் மக்களில் பெரும்பான்மையினர் எனக்கு வராது அல்லது எங்கள் ஊருக்கு வராது என்று இறுமாப்புடன் இன்னும் உள்ளனர்.

இதனால் என்ன நடக்கும் என்பதற்கு இத்தாலி ஒரு முன் உதாரணமாக இருந்தும், அந்த எச்சரிக்கையில் இருந்து நாம் உட்பட பல நாடுகள் பாடம் கற்றுக்கொள்ளவில்லை. கொரோனா கிருமி தாக்குதலைத் தொடர்ந்து இத்தாலி நாட்டில் தனிமைப்படுத்தல் அறிவிக்கப்பட்டது. பள்ளிகளும் கல்லூரிகளும் மூடப்பட்டன. ஆனால், மக்கள் தமக்கு எதுவும் நடக்கப்போவதில்லை என்று வழக்கம்போல் நடந்துவந்தனர். இதனால், பாதிப்பட்டவர்களின் எண்ணிக்கை அதிகரித்தது. சில மரணங்கள் நிகழ்ந்தன. அப்போதும், “அவர்களெல்லாம் வயதானவர்கள்; ஊடகங்கள் தேவையில்லாமல் பயத்தைப் பரப்புகின்றன” என்று மக்கள் எப்போதும்போல் தங்கள் வாழ்க்கையைத் தொடர்ந்தனர். சில நாட்களிலேயே பாதிக்கப்பட்டோர் எண்ணிக்கை மளமளவென்று உயர்ந்தது. ஒரே நாளில் இரட்டிப்பாகியது. திரும்பிய பக்கமெல்லாம்,“கைகளைக்கழுவுங்கள்; கூட்டங்களைத் தவிருங்கள்” என்ற பிரச்சாரம் ஒலித்தது. ஆனாலும், இத்தாலியின் மீதி 75 சதவிகிதம் மக்கள் இயல்பு வாழ்க்கையை மாற்றிக்கொள்ளவில்லை. தொடர்ந்து பாதிக்கப்பட்டோர் எண்ணிக்கை வெகுவாக அதிகரித்தது; உயிர்ப் பலிகளும். மருத்துவமனைகள் நிரம்பின. நோயாளிகள் அதிகமான நிலையில் அந்த எண்ணிக்கைக்கு போதுமான மருத்துவர்களோ செவி லியர்களோ இல்லாத நிலை. மருத்துவர்களும் செவி லியர்களும்கூட நோயுற்றார்கள். அவர்கள் மூலம் அவர்கள் குடும்பங்களுக்குப் பரவியது. போர்க்களம் போலானது இத்தாலி. சிகிச்சை கிடைத்தால் குணமாகி விடக்கூடியவர்கள்கூட மருத்துவமனைகளில் இடமின்மையால் மடியும் நிலை. மடிந்தவர்களை எரியூட்ட முடியாத நிலை.

இதுபோல்தான் அமெரிக்காவும். தன் குடிமக்களுக்கு போதிய அளவில் முககவசங்களை வினியோகிக்கக்கூட இயலாமல் விழி பிதுங்கி நின்றது அமெரிக்க அரசு.

அமெரிக்கா, இத்தாலி போன்ற ஒரு முன்னேறிய நாட்டின் நிலையே இது என்றால், மக்கள் நெருக்கம் அதிகமான,மருத்துவ வசதிகள் குறைவான இந்தியாவின் நிலை என்னவாகும் என நாம் உஷாராகி இருக்க வேண்டும்; முடிந்தளவு கோவிட்19 கிருமி மேலும் பரவுவதைத் தள்ளிப்போடுவதில் நாம் கவனம் செலுத்தி இருக்க வேண்டும்.

இந்தவகையில் சீனாவிடம் இருந்து நாம் கற்றுக்கொண்டிருக்க முடியும். சீனா தொடக்கத்தில் கோவிட் 19ஐ எதிர்கொள்வதில் பெரும் தவறுகளைச் செய்தது. ஆனாலும், கடுமையான நடவடிக்கைகள் மூலம் மீண்டது. ஒரு போர்க்கால நடவடிக்கையைப் போல செயல்பட்டனர். பள்ளிக்கூடங்கள், திரையரங்கங்கள், உணவகங்கள் மூடப்பட்டன. பயணங்கள் தடுக்கப்பட்டன. மக்கள் முடக்கப்பட்டனர். அனைவருக்கும் அவர்கள் வீடுகளுக்கே உணவு கொண்டுவந்து சேர்க்கப்பட்டது; இதுபோல் மருந்து உட்பட மற்ற தேவைகளும் வீடுகளுக்கே வந்தன. கிருமி

(தொடர்ச்சி 59ம் பக்கம்)

## சில்வியா பிளாத்

# கல்லறையைச் சென்றடையாது மிதந்த குரல்

### ஸிந்துஜா

அந்த பிப்ரவரி அதிகாலையில் படுக்கை அறையில் அவள் நுழைந்து பார்த்தபோது, அவளுடைய மூன்று வயதுப் பெண் குழந்தையும் ஒரு வயது ஆன ஆண் குழந்தையும் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தனர். அவர்கள் எழுந்ததும் குடிப்பதற்குப் பாலும் உண்பதற்கு ரொட்டியும் எடுத்து வைத்தாள். கதவுகளின் இடைவெளிகளை மூடி, ஜன்னல்களைத் துணிகளால் அடைத்துவிட்டு சமையல் அறைக்குச் சென்றாள். அங்கிருந்த எரிவாயு அடுப்பைத் திறந்தாள். அந்தத் தீயடுப்பை எரியவிட்டு அதற்குள் தன் தலையைக் கொடுத்தாள். அப்போது அவளுக்கு வயது முப்பது. அன்று காலையில் வீட்டுக்குள் வந்து பார்த்த நர்ஸ், அங்கே சில்வியா பிளாத் இறந்து கிடப்பதை பார்த்தாள்.

சில்வியா பிளாத் 1932ஆம் ஆண்டு பாஸ்டனில் பிறந்தாள். அவளது தந்தை ஓட்டோ பிளாத் ஓர் ஜெர்மானியர், தாய் அரெலியா பிளாத் ஆஸ்திரிய வம்சா வழியில் வந்த அமெரிக்கப் பெண்மணி. சில்வியா அவளுடைய எட்டாவது வயதில் பாஸ்டன் ஹெரால்டு பத்திரிகையில் குழந்தைகளுக்கான பாடலை எழுதினாள். இயற்கை, பறவைகள், வசந்த காலம், இலையுதிர் காலம், முதன் முறையாகப் பார்த்த பனி மழை, தலைக்கு மேல் மின்னும் நட்சத்திரங்கள் இவையெல்லாம் ஒரு சிறுமியைப் பிரமிக்க வைக்கும் விஷயங்கள்தான்; ஒரு வளரும் கவிதாயினியைக்கூட. அவளுடைய முதல் கவிதை 'கிறிஸ்டியன் சயின்ஸ் மானிட்டர்' பத்திரிகையிலும் முதல் சிறுகதை 'செவென்டீன்' இதழிலும் வெளிவந்தன.



ஸ்மித் கல்லூரியில் படிக்கையில் அவளுக்கு ஸ்காலர்ஷிப் கிடைத்தது. படிப்பில் அவள் தேர்ச்சி மிகுந்த மாணவியாக இருந்தாள். கல்லூரி நடத்திய இதழான 'ஸ்மித் ரிவியூ'வின் எடிட்டராக இருக்கும் வாய்ப்பு கிடைத்த போது மிகவும் மகிழ்ச்சி அடைந்தாள். மூன்றாம் ஆண்டுப் படிப்பை முடிக்கும் போது Mademoiselle இதழின் கௌரவ ஆசிரியராக நியமிக்கப்பட்டு ஒரு மாதம் நியூயார்க்கில் வேலை பார்த்தாள். மேற்படிப்புக்குக் கேம்பிரிட்ஜ் சென்ற போதும் அவளுக்கு ஸ்காலர்ஷிப் கிடைத்தது.

அவளது இளம் வயதில் நேர்ந்த தந்தையின் மறைவு சில்வியாவின் மனதை வெகுவாகப் பாதித்திருந்தது. சில்வியா தன் இருபதாவது வயதில் அவளுடைய முதல் தற்கொலை முயற்சியை மேற்கொண்டாள். ஹார்வர்டில் அவள் படிக்க அனுமதி கிட்டாததாலும் வேலைப் பளுவினாலும் விரக்தி அடைந்த அவள் ஒரு நாள் வீட்டிற்குள் அவள் தாய் வைத்திருந்த தூக்க மாத்திரைகள் அனைத்தையும் உட்கொண்டதால் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டாள். ஆறு மாதங்கள் மருத்துவமனையில் இருந்த அவளை மின் அதிர்வுத் தெரப்பி மூலம் குணப்படுத்தினார்கள். ஆனால், அவள் ஆழ்மனதில் தற்கொலை முயற்சிக்கான எண்ணம் பதிந்திருப்பதை இது உணர்த்தியது.

சில்வியாவின் இளமையில் அவளின் கவனம் அமெரிக்க சூழலின் கட்டுடைப்புகளில் விழுந்தது. குறிப்பாக ராபர்ட் லோவெல் என்னும் அமெரிக்கக் கவிஞரின் 'வாழ்க்கையைப் பற்றிய குறிப்புகள்' என்னும் புத்தகம் சில்வியாவைப் பெரிதும் ஈர்த்தது. லோவெல்லின் இந்தப் புத்தகம் தனிப்பட்ட, குடும்ப மனோரீதியான போராட்டங்களை மூடுதிரைகள் ஏதுமின்றி வீரியத்துடன் எழுதப்பட்ட கவிதைகளைக் கொண்டதாக இருந்தது. மரபுக் கவிதைகளும் புதுக் கவிதைகளும் எழுதிய லோவெல் தன் மனதைத் திறந்து, அந்தரங்கங்களைப் பொது வெளியில் தனது ஒப்புதல் வாக்குமூலங்களாக வெளிப்படுத்தினார். சில்வியாவை இத்தகைய சிந்தனைப் போக்கு வெகுவாகக் கவர்ந்தது. மேலும்,லோவெல் மனநல மருத்துவமனையில் எதிர்கொண்ட அனுபவங்களை அவள் தன் மன நிலையுடன் ஒப்பிட்டுப் பார்த்தாள். இத்தகைய உணர்ச்சி பொங்கும், கலைத்திறன் மிக்க, மனோ தத்துவத்தை வெளிப்படுத்துகிற அமெரிக்கக் கவிதை முயற்சிகளில் அவள் தன்னையும் ஈடுபடுத்திக்கொண்டாள்.

அமெரிக்காவிலிருந்து படிப்புக்காக சில்வியா இங்கிலாந்து சென்றாலும் அவளது கலை மனது அமெரிக்காவையே நாடியது. அவள் விரும்பிய பல எழுத்தாளர்கள் அமெரிக்கர்களாக இருந்தார்கள். தன்னை ஒரு பத்தாம் பசலி என்றும் தன் மனம் ஐம்பது வருஷங்கள் பின்னோக்கிச் சென்று வாழ்கிறது என்று ஒரு முறை சில்வியா சொன்னாள். ஆனால், இருப்பிடத்தைப் பொறுத்தவரை அவள் இங்கிலாந்தை விரும்பினாள்.

ஆங்கிலக் கவிகளின் (British Poets) சிந்தனைப்



போக்கு அமெரிக்கக் கவிஞர்களுடன் ஒப்பிடுகையில் சற்றுப் பின்தங்கியதாகத்தான் இருந்தது என்று சில்வியா கருதினாள். ஒரு கவிஞன் அமெரிக்காவில் தன் வாசிப்பை ஆரம்பிக்கையிலேயே டி.எஸ். எலியட், டைலன் தாமஸ், யீட்ஸ் என்று நவீன கவிதைகளைப் பரிச்சயம் செய்துகொள்ள முடிந்த நிலையில், இங்கிலாந்தில் எவரும் ஷேக்ஸ்பியரிலிருந்து ஆரம்பிக்க வேண்டியிருப்பதை யாராலும் தடுக்க முடியவில்லை என்று அவள் ஒருமுறை தெரிவித்திருக்கிறாள்.

இங்கிலாந்தில் படிக்கும் போது ஆங்கிலக் கவியான டெட் ஹ்யூசுடன் பழக்கம் ஏற்பட்டது. இருவருக்கும் இடையே இருந்த இலக்கிய ஆர்வமும் கவிதை ஈடுபாடும் அவர்கள் திருமணம் விரைவில் முடியக் காரணங்களாக இருந்தன. ஹியூஸ் தனது ஆசிரியர் பதவியை விரும்பாததால் அதனை உதறிவிட்டு முழுநேர எழுத்தாளனாக மாறினார். அப்போது சில்வியா, அவள் படித்த ஸ்மித் கல்லூரியிலேயே வேலை பார்க்க ஆரம்பித்து ஒரு வருடம் ஆகியிருந்தது. ஹியூசின் வற்புறுத்தல் காரணமாக சில்வியாவும் வேலையை விட்டு முழு நேர எழுத்தாளராக மாறினாள். ஆனால், அவளது இரு குழந்தைகளையும் வைத்துக்கொண்டு எழுதிச் சம்பாதித்து குடும்பம் நடத்துவது என்பது பெரும் பிரச்சினையாக ஆகிவிட்டது. இதனால், கணவனுடன் அடிக்கடி தகராறுகள் எழுந்தன. அவளது திருமணம் ஆறு ஆண்டுகள்தான் நீடித்தது. கணவனுக்கும் அவளுக்கும் சிநேகிதியா இருந்த அசியா வெவிலுடன் ஹியூஸ் கொண்ட உறவு தெரிய வந்ததும் சில்வியா அவனிடமிருந்து விவாகரத்து பெற்றாள்.

மண வாழ்க்கைப் பிரச்சினையைத் தவிர சில்வியாவின் முப்பதாவது வயதில் அவளைத் தற்கொலைக்குத் தூண்டிய மற்றொரு முக்கியமான நிகழ்வு, 'பெல் ஜார்' என்னும் அவளது நாவலை, அவளது கவிதைகளைப் பிரசுரித்த ஆல்ஃப்ரெட் ஏ.நாஃப் என்னும் பதிப்பாளர் நிராகரித்துவிட்டார். புகழ்பெற்ற அன்னா ஃபிராங்க் டயரிகளைக் கண்டுபிடித்து வெளியிட்ட ஜூடித் ஜோன்ஸ்தான் அப்போது மேற்குறிப்பிட்ட பதிப்பகத்தின் ஆசிரியராக இருந்தார். அவர் சில்வியாவுக்கு எழுதிய கடிதத்தில், 'வாஸ்தவத்தில் ஒரு நாவலைச் சொல்லும் முறையில் 'பெல் ஜார்' எழுதப்படவில்லை' என்று சொல்லியது சில்வியாவை மிகவும் துன்புறுத்திவிட்டது.

'பெல் ஜார்' பிரசுரமான போது சில்வியா பிளாத் மறைந்துவிட்டிருந்தாள். ஆனால், அது வெளிவந்தவுடன் உலகின் 'கிளாசிக்' நாவல்களில் ஒன்றாகப் புகழ்பெற்றுவிட்டது. அம்மாவுடன் சண்டை போடுபவள், சாதனை நிகழ்த்த வேண்டும் என்று பிடிவாதமாக இருப்பவள், தன் சுய கவுரவத்தைக் காப்பாற்றிக்கொள்ளப் போராடுபவள் என்ற வகையில் இருந்த அல்லது இவர்களைப் போலிருந்த பெண்கள் அனைவரும் கொண்டாடும் நாவலாகி விட்டது 'பெல் ஜார்'.

'பெல் ஜார்', சில்வியா பிளாத்தின் சுயசரிதக் கதைதான். அந்நாவலில் போற்றப்பட்ட சுய நிராகரிப்பையும் அது விவரித்த எல்லையற்ற நேர்மையையும் கண்டு வாசக உலகம் பலத்த வரவேற்பை அளித்தது. 1950களில் நிலவிய சமூக அரசியலைக் குறி வைத்து எழுதப்பட்ட நாவல் அது. பெண்களுக்கான குறுகிய சூழலை அறிய வரும் கதாநாயகியான எஸ்தரை தனிமையும் பின்னர் சித்தப்பிரமையும் சூழ்ந்துகொள்கின்றன. பெண்களின் பாலுணர்வு, தாய்மை, சுடர் விடும் அறிவின் ஒளி ஆகியவற்றின் மீது அன்றைய காலம் ஏற்படுத்திய சுமைகளை ஏற்க முடியாமல் எஸ்தர் சின்னாபின்னமடைவதை நாவல் சுட்டுகிறது. இறுதியில் அவள் இந்தக் கட்டுக்களிலிருந்து விடுபட்டு எழுவதைப் பெண்களின் வெற்றி என்று நாவல் அறிவிக்கிறது.

ஒழுங்கும் கட்டுப்பாடும் தனது எழுத்தில் காணக் கிடைக்க வேண்டும் என்று சில்வியா உறுதியாக நம்பினாள். கட்டப்பட்ட பிம்பங்கள் மீது மரியாதையும் நம்பிக்கையும் வைக்காமல் அவளது நடமாட்டம் இருந்தது. 'ஷேக்ஸ்பியரைப் படிக்கிறேன். அவ்வளவுதான்' என்று சொல்லும் தைரியம் அவளிடம் இருந்தது. தனது கவிதைகளைப் பற்றிப் பேசுகையில் அவளது முதல் தொகுப்பான 'கொலாசஸி'ல் உள்ள கவிதைகளை உரத்துப் படிக்கும் வாய்ப்பு தனக்குக் கிட்டவில்லை என்றும் அதற்குப் பின் வந்த கவிதைகளை வாய்விட்டுப் படிக்கையில் தனக்குத்தானே பேசிக் கொள்ளும் உணர்வு ஏற்பட்டதாகவும் கூறினாள். இம் மாதிரி படிக்கப்படும் கவிதைகளை ஒலிநாடாவில் பதிவு செய்து மற்றவர்கள் ரசிக்கப் பகிர்வது கவிஞர்களுக்குச் செய்யப்படும் சேவை என்று அவள் நினைத்தாள். முந்திய காலத்தில் ஒரு சிறு கூட்டமாகக் கவிஞர்கள் தமக்குள் பேசிப் புழங்கியதற்கு மாறாக இது கவிஞனின் தாக்க வெளியை அதிகரித்து விடுகிறது என்பது அவளின் நம்பிக்கையாக இருந்தது.

சில்வியாவின் முதல் கவிதைத் தொகுப்பான 'கொலாசஸ்' 1960இல் வெளிவந்தது. இந்தத் தொகுப்பில் உள்ள கவிதைகள் சில்வியாவிடம் இருந்த விரக்தியையும் வெறுப்பு மனப்பாங்கையும் வன்முறை உணர்ச்சிகளையும் மரணத்தைக் கொண்டாடும் மனநிலையையும் எதிரொலித்தன. 1962ல் சில்வியா முழு வேகத்துடன் கவிதைகளை படைத்தாள். உலகப் புகழ்பெற்ற அவளுடைய கவிதைகளான 'லேடி லாசரஸ்', 'டாடி' ஆகியவை இந்த சமயத்தில்தான் எழுதப்பட்டன.

'டாடி' கவிதை பிக்காஸோவின் பிரசித்திப் பெற்ற கெர்னிகாவைப் போல கவிதை உலகின் பீடத்தை அலங்கரிக்கிறது என்று இலக்கிய விமரிசகரும் தத்துவவாதியுமான ஜார்ஜ் ஸ்டெய்னர் கூறினார். 'டாடி' கவிதை டாகாவ், ஆஷ்விஸ் ஆகிய வதை முகாம்களைப் பற்றியும் ஹிட்லரின் மெய்ன் காம்ஃப் பற்றியும் பேசுகிறது. சில்வியாவின் பின்புலம் ஜெர்மனியையும் ஆஸ்திரியாவையும் சார்ந்தது என்பதால் அவற்றின் தாக்கம் கூர்மையாக இந்தக் கவிதையில் வெளிப்படுகிறது.

'லேடி லாசரஸ்' சில்வியாவின் வாழ்க்கையைப் பிரதிபலித்த உணர்ச்சி மிகுந்த கவிதை (இக்கவிதை இங்கே மொழிபெயர்த்து தரப்படுகிறது.) சரித்திரமும் அரசியலும் சில்வியாவைக் கவர்ந்த பேசுபொருட்களாய் இருந்தன. புத்தக அறிவுக்கு அப்பால் வாழ்க்கை ஏற்படுத்தித் தந்த அனுபவங்களின் சாரம் அவள் கவிதைகளை மெருகேற்றியது. கற்பனை கலக்காத யதார்த்தம், சுவாரஸ்யமற்ற புரிதல் என்று கருதிய சில்வியா மனிதர் மீதான கட்டுப்பாடுகளையும் வதைகளையும் ஒருவர் புரிந்துகொண்டு அனுபவச் செழுமையுடன் எழுத வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தாள்.

டெட் ஹியூஸ் தொகுத்த 'ஏரியல்' என்னும் சிறந்த கவிதைத் தொகுப்பில் 'டாடி'. 'லேடி லாசரஸ்' என்ற இரு கவிதைகளும் இடம்பெற்றன. இத் தொகுப்பு சில்வியாவை வழிபடும் ஒரு வாசகர் கூட்டத்தை உருவாக்கிவிட்டது. ஏரியல் பற்றி 'நியூயார்க் டைம்ஸ்' விமர்சகர், 'சில்வியாவின் கவிதைகளில் அயராத நேர்மையை ஒருவர் காணமுடியும். வார்த்தைகளின் தீவிரத்தைச் சொற்களில் ஏற்றிவிட்ட இக்கவிதைகளில் எவரையும் கவரவல்ல காந்த சக்தியை உணரலாம்' என்று எழுதினார். சில்வியாவின் மரணத்துக்குப் பிறகு டெட் ஹியூஸ் கொண்டு வந்த 'தி கலெக்டட் போயம்ஸ்' என்னும் நூலுக்குப் புலிட்சர் பரிசு கிடைத்தது. இறந்த எழுத்தாளருக்கு புலிட்சர் பரிசு கொடுக்கப்பட்டது அதுதான் முதல் தடவை.



1960 முதல் 1963 வரை (இறப்பதற்கு ஒரு வாரம் முன்பு வரை) எழுதப்பட்ட சில்வியாவின் கடிதங்கள் அவள் இறந்து ஐம்பத்தி நான்கு வருடங்கள் கழித்துஇரண்டு பாகங்களாக வெளியிடப்பட்டன. அவள் பதினோரு வயதிலிருந்து, தான் எழுதிய கடிதங்களை சஞ்சிகையாகக் கருதி வைத்திருந்தாள். எந்தவித ஒளிவு மறைவின்றி, அவளது எண்ணங்கள் அப்பட்டமாகவும் தீர்க்கமாகவும் வெளிப்பட்ட கடிதங்கள் இவை. ஆனால், இவற்றை டெட் ஹியூஸ் எரித்துவிட்டார் என்று ஒரு செய்தி பரவியது.

மேற்குறிப்பிட்ட இரண்டு பாகங்களில் வெளிவந்த கடிதங்கள் சில்வியா தனது மருத்துவரான டாக்டர் ரூத் பர்ன் ஹவுசுக்கு எழுதியவை. ஹியூஸ் மற்றொரு பெண்ணுடன் தொடர்புகொண்டது தெரியவந்த பின் எழுதிய பதினான்கு கடிதங்கள்தாம் இத்தொகுப்பின் முக்கால்வாசி இடத்தைப் பிடித்திருக்கின்றன. ஒரு கடிதத்தில் ஹியூஸ் அவளைக் கடுமையாக அடித்ததினால் அவளுக்குக் கருச்சிதைவு ஏற்பட்டது என்று தெரிய வருகிறது. ஆனால், இது முட்டாள்தனமான செய்தி என்று ஹியூஸ் தரப்பிலிருந்து மறுத்து ஓர் அறிக்கை வெளியாகியது.

சில்வியாவின் வாழ்க்கையைச் சிதைத்து அவளைத் தற்கொலைக்கு இழுத்துச் சென்றவராக ஹியூஸைப் பற்றி நினைத்து கோபங்கொண்ட சில்வியாவின் வாசகர்கள், அவளது கல்லறையில் பொறிக்கப்பட்டிருந்த சில்வியா பிளாத் ஹியூஸ் என்ற பெயரில் உள்ள ஹியூஸின் பெயரை உடைத்து எறிந்துவிட்டார்கள். ●

ஸிந்துஜா <weenvy@gmail.com>

கவிதை

# சீமாட்டி லாசரஸ்

**சில்வியா பிளாத்**
**தமிழில்: ஸிந்துஜா**



நான் மறுபடியும் நிகழ்த்தி விட்டேன்.
பத்து வருடங்களுக்கு ஒருமுறை -
சமாளித்தபடி.

நடமாடும் அற்புதம்
என் தேகம். நாஜியின்
விளக்கின் மறைப்பு போலப்
பிரகாசிக்கிறது.
என் வலப் பாதம்

ஒரு பேப்பர் குண்டு.
என் முகம்
ஒரு அவலட்சணமான
யூதத் துணி.

அதை உரித்து விடு.
ஓ, என் எதிரியே,
அச்சமாயிருக்கிறதா?

என் நாசி, என் கண் குழிகள், என் பற்கள்,
நெடிய என் மூச்சு
எல்லாம் மறைந்து விடும் ஒரே நாளில்.

வெகு விரைவில்
என் சமாதி தின்ற
உடலின் சதை என் மீது மறுபடியும் படும்.

புன்னகைப் பெண்ணாய் நான்.
எனக்கு முப்பது வயதுதான்.
பூனையைப் போல எனக்கும் சாவு ஒன்பது முறை.

இது மூன்றாவது.
என்ன ஒரு அசிங்கம்?
பத்தாண்டுக்கொருமுறை
அழிந்து விடுவது என்பது.

பல லட்சக்கணக்கான மெல்லிழைகள் போல
கூட்டம் நெருக்கியடித்து
வந்து பார்க்கிறது.
கட்டப்பட்ட என் கைகால்களை
விடுவித்து.
பெரும் உடை உரிப்பு.
.
குணவான்களே
சீமாட்டிகளே

இவை என் கைகள்.
இவை என் முழங்கால்கள்
சதையும் எலும்புமாய் நான்.

அதே பெண்தான் நான்.
முதல் தடவை நேர்ந்த போது
எனக்கு வயது பத்து.
அது ஒரு விபத்து.

இரண்டாம் தடவை நிகழ்ந்த போது
திரும்ப வர வேண்டியதில்லை என நினைத்தேன்.
மூடப்பட்ட கடல் சங்கு போல ஆனேன்.

அவர்கள் கூக்குரலிட்டார்கள்.
என் மீது ஒட்டியிருந்த புழுக்களை
ஒட்டிக் கொண்ட முத்துக்களென
நீக்கினார்கள்.

எல்லாவற்றையும் போல
இறப்பதும் ஒரு கலைதான்.
அதை நான் திறம்படச் செய்கிறேன்.

அதைச் செய்தால் அது நரகம்.
அது உண்மையாகவும் உள்ளது.
எனக்கு அழைப்பு வந்து விட்டதென
நீங்கள் கூறலாம்.

ஒரு கூட்டுக்குள் அதைச் செய்வது எளிது.
செய்து விட்டு அடங்கி விடலாம்.
ஆனால், பட்டப்பகலில்
திரும்பி வருவது நாடகம் போல.
அந்த இடத்தில், அந்த முகங்கள் காட்டுத்தனமாக
இரைகின்றன:
'அற்புதம்!'
இது என்னை அடித்துப் போடுகிறது.

என் தழும்புகளைக் காண
என் இதயத்தின் ஒலியைக் கேட்க
என்னுடன் பேச அல்லது தொட
அல்லது கொஞ்சம் ரத்தம்,
அல்லது என் தலை மயிர், என் உடை
எல்லாவற்றுக்கும் வசூல் உண்டு.
மாண்புமிகு டாக்டர் அவர்களே
மாண்புமிகு என் எதிரியே

நான் உங்களின் படைப்பு.
உங்களின் செல்வம்.
தங்கக் குழந்தை
அது ஒரு கூச்சலில் கரைகிறது.
நான் தீய்க்கப்படுகிறேன்.
உங்கள் பரிவை நான்
மதிக்கவில்லை என்று எண்ணாதீர்கள்.

நீங்கள் கிண்டி கலக்குகிறீர்கள்.
சாம்பல், சாம்பல்.
சதை எலும்பு தவிர வேறொன்றும் இல்லை.'

ஒரு சோப்புக் கட்டி
ஒரு திருமண மோதிரம்
ஒரு தங்கச் சரடு

மாண்புமிகு கடவுளே
மாண்புமிகு சாத்தானே
ஜாக்கிரதை.

என் சாம்பலிலிருந்து
சிவப்புக் கேசத்துடன்
எழுகிறேன்.
மனிதர்களைக்
காற்றைப் போல
உறிஞ்சுகிறேன். ●

*லாசரஸ், இறந்த நான்காம் நாள்
இயேசுவால் உயிர்ப்பிக்கப்பட்டு எழுந்து வந்தவர்.



# டி. கண்ணன் கவிதைகள்

1
பறந்து சென்ற பறவைகள் இன்னம் திரும்பவில்லை
காத்திருந்தது கனவு
புரண்டு புரண்டு படுத்தது விழிப்பு
விடியக் காத்திருந்தது இருள்
கனவு மூடக் காத்திருந்தது விடியல்
இருள் அந்தியின் தத்தளிப்பு
நரை வானத்தில் உற்சாகமாய்
சிலம்பிக் கொண்டிருந்தன
பறவைகள்

2
ஓடாத கைக்கடியாரத்தை
அறிந்தே பரிசாய் அளித்து விட்டுச் சென்றான்
நண்பன் சாயல் கொண்ட நண்பன்
வெகு காலத்திற்கு பிறகு
அது துடிக்கத் தொடங்கியது
அந்த நண்பன் இறந்து விட்டதாய்
நான் அனுமானித்துக் கொண்டேன்
ஆம்...
அவன் இறந்துதான் விட்டான்

3
தென்னங்கீற்றில் ஆடிக் கொண்டிருந்தது கிளி
அவன் மனம் கொண்ட வில்லால்
அதனைக் அடித்துக் கொண்டிருந்தான்
தப்பிப் பறக்கவில்லை
அதே இடத்தில் அமர்ந்து கொண்டிருந்தது கிளி
அம்புகள்தான் விலகி விலகிச் சென்று கொண்டிருந்தன

4
அப்பா கிணற்றில் தண்ணீர்
இரைத்துக் கொண்டிருந்தார்
தேங்காய் துருவிக் கொண்டிருந்தது ஒரு குழந்தை
வாசலை பெருக்கிக் கொண்டிருந்தது இன்னொன்று
விளக்கை தேய்த்துக் கொண்டிருந்தாள் அக்கா
அவரைக்காய் ஆய்ந்து கொண்டிருந்தது கடைக்குட்டி
அவர்கள் அம்மாவிற்கு
இன்று சுபம் ●

**“டி. கண்ணன்” <krishnaswamy164@gmail.com>**

# வண்ணத்துப் பூச்சிக் கனவுகள்

**பியட்றிஸ் லம்வாகா**
தமிழில்: **எம். ரிஷான் ஷெரீப்**
ஓவியம்: Poulami Banerjee

மெகா எஃப்.எம்மில் அறிவிப்பாளர் லாபல்பினி உனது பெயரை வாசித்தார். நாங்கள் தினந்தோறும் செய்துவந்த பிரார்த்தனையின் பலனாகத்தான் அது நிகழ்ந்திருக்கும். நாங்கள் ஒருநாள்கூடத் தவறாது ஐந்து வருடங்களாக அந்த நிகழ்ச்சியைச் செவிமடுத்து வந்தோம். இராணுவப் படையினர், சூடான் கிளர்ச்சியாளர்களிடமிருந்து உன்னையும் மேலும் பத்துப் பிள்ளைகளையும் காப்பாற்றியிருந்தார்கள். உனது பெயர் தவறுதலாகக் கூறப்பட்டிருக்கலாமென்றே நாங்கள் முதலில் நினைத்தோம். வானொலியில் லாபல்பினி உனது பெயரைத் திரும்பவும் கூறும் வரையில் நாங்கள் காத்திருந்தோம். அவர் எமது அம்மாவின் பெயரையும் தெரிவித்து, அலொகொலும் எனும் எமது கிராமத்தின் பெயரையும் தெரிவித்தார். லமுனு எனும் பெயரில் நீயன்றி வேறெவரும் ஊரில் இருக்கவில்லை என்பதை நாங்கள் அறிந்திருந்தோம்.





கடந்த ஐந்து வருட காலமாக மெகா எஃப்.எம். வானொலியைக் கேட்டுக் கொண்டிருந்த ஒரு தொகைப் பெற்றோரின் வரிசையில் நாங்களும் இணைந்துகொண்டோம். ஆமாம், தமது அன்புக்குரிய பிள்ளைகளின் பெயர்களை இப்போது அறிவிப்பார்கள், இப்போது அறிவிப்பார்கள் என்று காத்திருந்தவர்கள் வரிசையில், நாங்கள் எந்நாளும் வானொலிப் பெட்டியைச் சுற்றி வர அமர்ந்திருந்தோம். லமுனு என்றோ அலொகொலும் என்றோ கூறப்பட்ட ஒவ்வொரு தடவையும் எமது இதயங்கள் பலமாக அதிர்ந்தன. ஒரு மணித்தியாலம் முழுவதும் ஒரு வார்த்தைகூடக் கதைக்காமல் வானொலியைச் செவிமடுத்துக் கொண்டிருந்த நாங்கள் நிகழ்ச்சி நிறைவடைந்த பிறகு நாள் முழுதும் ஏங்கிக் கொண்டிருந்தோம். நாட்கள் கடந்து வருடங்களான போது மேலும் மேலும் பிரார்த்தனைகள் புரியப் பழகியிருந்தோம். உனதுபெயர் கூறப்படாதவிடத்து, உன்னைக் காணும் எதிர்பார்ப்பும் எம்மிடமிருந்து தொலைவாகிக் கொண்டே வந்தது. ஆனாலும் நாங்கள் காத்திருந்தோம். தினந்தோறும் வானொலியை செவிமடுக்க எங்கிருந்தாவது பேட்டரிகளைத் தேடிக்கொண்டு வந்தோம்.

லமுனு, நாங்கள் இதை உன்னிடம் கூறாதிருப்பதே நல்லது. நீ திரும்பவும் எம்மிடம் வந்து சேர மாட்டாயென எமக்குத் தகவல் வந்த நாட்களில் உனது ஆத்மாவைப் புதைத்துவிட்டோம். ஆமாம், சுற்றி வர இருந்த ஆட்கள் உன்னைப் பற்றிய எதிர்பார்ப்புகளைக் கைவிடுமாறுதான் கூறிக் கொண்டிருந்தார்கள். கொண்டு செல்லப்பட்டு நான்கு வருடங்களின் பின்னர் வீடு திரும்பிய பொங்கொமின், உனது சடலம் வெயிலில் காய்ந்து வெடித்துப் பிளந்திருந்ததைக் கண்ணுற்றதாகக் கூறினான். எனினும், நீ மரித்துப் போயிருப்பாயென நாங்கள் ஒரு கணமும் நினைக்கவில்லை. உனது ஆன்மா வட உகாண்டாவில் மிதந்து கொண்டிருப்பதைக் காண நாங்கள் விரும்பவில்லை. நீ திரும்பவும் வந்து ஆவியாக மாறி எம்மை அச்சுறுத்துவதைக் காணவும் நாங்கள் விரும்பவில்லை. நீ செத்துப் போயிருப்பாயென அம்மா ஒரு கணம்கூட எண்ணிப் பார்க்க விரும்பவில்லை. நீ எப்போதாவது திரும்பி வருவாயென்ற அவளது நம்பிக்கைதான் எம்மையும் எதிர்பார்ப்போடு இருக்க வைத்தது. வண்ணத்துப் பூச்சிகள் அவளது உள்ளத்தை பலப்படுத்திக்கொள்ளுமாறு கூறி முணுமுணுப்பதைப் போல கனவொன்று கண்டதாக அவள் கூறினாள். அம்மா அந்தக் கனவைக் கண்ட இரவுக்கு அடுத்த நாள், வீடு முழுவதும் வண்ணத்துப் பூச்சிகள் நிறைந்திருந்தன. அவளுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதாக நாங்கள் நினைத்தோம். நீ அவளது புத்தி யோசனையையும் எடுத்துச் சென்றிருக்கிறாயென்றே நாங்கள் நினைத்தோம்.

உனது ஆத்மா சாந்தியடைய வேண்டி அம்மா மூன்று நாட்களாக ஒபொபோ இலைகளை அணிந்து கொண்டிருந்தாள். எம்மை மகிழ்ச்சிப்படுத்துவதற்காக அவள் அவ்வாறு செய்தாள் என்பதை நாங்கள் அறிந்திருந்தோம். உன்னை நிம்மதியாக இருக்க விடுமாறு நாங்கள் அவளிடம் கூறினோம். அவள் பாட்டுக்கு அவளுடைய வேலைகளைச் செய்து கொண்டிருக்கலாம்தானே அப்போது. ஆனாலும் அவள் அவ்வாறு செய்யவில்லை. உனது ஆத்மாவோடு, அவளுடைய ஆத்மாவையும் சேர்த்துப் புதைத்தது போலத்தான் அவள் எம்மைச் சுற்றி நடமாடிக் கொண்டிருந்தாள். உனது ஆத்மாவை, அப்பாவுடையதற்கு அருகிலேயேதான் புதைத்தோம். குளிரில் நீ வனாந்தரங்களில் பின்தங்கி விடுவதை நாங்கள் விரும்பவில்லை. உன்னை நிம்மதியாக இருக்க விடுவதுதான் முக்கியமானதென அம்மா சொன்னாள். ஆமாம், அடுத்த ஜென்மத்திலாவது நீ நிம்மதியாக



இருக்க வேண்டும்.

அப்போதுதான் நாங்கள் உனது பெயரை வானொலியில் செவிமடுத்தோம். நாங்கள் தடுமாறிப் போய்விட்டோம். தப்பிச் செல்வதா? உனது ஆத்மாவைப் புதைத்த இடத்திலிருந்து மீண்டும் எடுப்பதா? இல்லாவிட்டால் நாங்கள் என்ன செய்தோம் என்பதை உன்னிடம் கூறாது உன்னை உன்னுடைய பாட்டில் இருக்க விடுவதா? எமக்கு ஒருபோதும் இதை உன்னிடம் கூற தைரியம் வராது. எப்போதாவது ஒருநாள் உனது பெயர் பொறிக்கப்பட்ட கல்லறையை நீ காணக்கூடும். அப்போது இதை எவ்வாறு உன்னிடம் கூறுவது என்பதை வண்ணத்துப் பூச்சிகள் எமக்குக் கற்றுத் தரக்கூடும்.

'வேர்ல்ட் விஷன்' எனப்படும் கடத்தப்பட்ட பிள்ளைகளுக்கான புனர்வாழ்வு நிலையத்தில் நீ இருந்தாய். உனக்கு உபதேசித்திருந்தார்கள். திரும்பவும் எம்முடன் இணைந்து வாழ்வது எவ்வாறென உனக்கு கற்றுக் கொடுத்திருந்தார்கள். அம்மா ஒரே தடவையில்

அழுவதையும் சிரிப்பதையும் என இரண்டையுமே செய்யத் தொடங்கிவிட்டாள். ஆமாம், நீ நிஜமாகவே உயிருடன் திரும்பி விட்டிருந்தாய். அதுவரையில், எமது இதயங்களுக்கு கடைசியிலாவது நிம்மதி கிடைக்கும் என நினைத்துக்கூடப் பார்க்க முடியாமலிருந்தோம். அன்றிரவு அம்மா பிரார்த்தித்தாள். சேவல் கூவும் வரைக்கும் நாங்களும் பிரார்த்தனையில் ஆழ்ந்திருந்தோம். எமக்கு மிகவும் சந்தோஷமாகவிருந்தது. நீ உயிருடன் இருப்பது குறித்து நாங்கள் அந்தளவு மகிழ்ச்சியடைந்திருந்தோம். அப்பாவுக்குத் தெரியுமென்றால் அவரும்கூட கல்லறையிலிருந்து எழுந்து வந்து விடுவார். நீ உயிருடன் இருப்பதை அறிந்துகொண்ட நாங்கள் அந்தளவு மகிழ்ச்சியடைந்திருந்தோம்.

கடைசியில் நீ வீட்டுக்குத் திரும்பிவிட்டாய். மரவள்ளித் தண்டு போல மெலிந்து போயிருந்தாய். உனது இடது கையிலும் வலது காலிலும் துப்பாக்கி ரவைகள் துளைத்த அடையாளங்கள் காணப்பட்டன. பூமி முழுவதும் நடந்து திரிந்து வந்தது போல, உனது கால்கள் வீங்கிப் போயிருந்தன. அடிப் பாதங்கள் வெடித்திருந்தன. முன்பெல்லாம் அழகாகக் காணப்பட்ட உனது முகத்தின் எல்லாப் புறத்திலும் காயங்களின் தழும்புகள் எஞ்சியிருந்தன. பழுத்த மிளகு விதையின் நிறமொத்து உனது விழிகள் காணப்பட்டன. உனக்கு நிகழ்ந்தவை அனைத்தையும் எமக்குக் காண்பிப்பது போல, நீ உனது காயத் தழும்புகளைத் தடவிக் கொண்டிருந்தாய். நாங்கள் எதுவும் உன்னிடம் கேட்கவில்லை. இதற்கு முன்பு அங்கு நடந்தவைகள் குறித்த கதைகளை நாங்கள் கேள்விப்பட்டிருந்தோம். அனேனா, ஆயா, பொங்கொமின், யெகோ, அயாத், லாலம், அவுமா, ஓசெங், ஒடிம், ஓலேம், உமா, அடெங், அக்வேரோ, லேகார், ஒடொங், லன்யேரோ, லாடு, டிமி, கடி.. இந்த அனைவரின் வாயிலிருந்தும், உனது கதையும் அவற்றைக் காட்டிலும் வேறுபட்டதாக இருக்காது என நாங்கள் நம்புகிறோம்.

லமுனு, நீ வீட்டுக்கு வந்ததன் பிறகு நாங்கள் பயந்து போயிருந்தோம். நாங்கள் உன்னைக் கண்டு பயந்தோம். நீ என்னவாக இருந்தாய் என்பது குறித்து பயந்தோம். அம்மா அயல்வீடொன்றிலிருந்து லயிபி மர அடுக்கொன்றைக் கேட்டு வாங்கிக்கொண்டு வந்தாள். உசேன் மாமா சந்தையிலிருந்து முட்டையொன்றை வாங்கி வந்தார். அனைத்திற்கும் முன்பதாக உன்னைத் தூய்மைப்படுத்த வேண்டுமே. அடர்ந்த காடுகளினுள்ளே நீ செய்தவற்றிலிருந்தும் கிளர்ச்சியாளர்கள் உன்னைச் செய்யுமாறு வற்புறுத்திய விடயங்களிலிருந்தும் முட்டை உன்னைத் தூய்மைப்படுத்தும். அவர்கள் உன்னை பலவந்தமாகக் கடத்திக்கொண்டு போனதை நாமறிவோம். நீ அவர்களோடு சேரவில்லை. நீ ஒருபோதும் அவர்களில் ஒருவராக ஆகவில்லை. நீ விரைவாக அடுக்கின் மேலால் குதித்துத் தாண்டினாய். நீ முட்டையின் மீது பாதத்தை வைத்ததுமே அதன் மஞ்சள் கரு விசிறுண்டது. நீ தூய்மையாகி விட்டிருந்தாய். கேள்வி எதையும் நீ கேட்கவேயில்லை. எது உன்னிடம் கூறப்பட்டதோ அதை நீ செய்தாய். இதைச் செய்ய வேண்டி நேரும் என்பதை முன்பே நீ அறிந்திருந்தது போல. இந்தச் சடங்கைச் செய்யாதுவிட்டால் நீ ஒருபோதும் தூய்மையாக மாட்டாய் என்பதைப் போல. அம்மா குலவையிடத் தொடங்கினாள். உன்னை மிகுந்த அன்போடு வீட்டுக்குள் வரவேற்றாள். ஆமாம், நீ மீண்டும் வீட்டுக்குச் சொந்தமாகி விட்டாய்.

நாங்கள் ஓசையெழுப்பாமல் உன்னையே பார்த்துக் கொண்டிருந்தோம். பதிலுக்கு நீயும் எம்மையே அமைதியாகப் பார்த்துக் கொண்டிருந்தாய். உனக்குப் பசியாக இருக்கக் கூடுமென எமக்குத் தோன்றிய வேளைகளில் நாங்கள் உனக்கு உணவளித்தோம். நீ எதுவும் பேசாமல் புளிச்சக்கீரை மசியலோடு வற்றாளைக் கிழங்கை மென்று விழுங்கிக் கொண்டிருந்தாய். உன்னை விருந்தாளி போலல்லாது எம்மில் ஒருவராக நடத்துவதே எமக்குத் தேவையாக இருந்தது. எனினும் நாங்கள் உன்னை புதியவளொருத்தியாகத்தான் எப்போதும் உணர்ந்தோம். நீ மீண்டும் பழைய லமுனு போல ஆகப் போவதில்லை என்பதை நாங்கள் அறிந்திருந்தோம். உன்னிடம் என்ன எதிர்பார்க்கிறோம் என்றே எங்களுக்குத் தெரியவில்லை. நீ ஒரு வார்த்தையாவது பேசும்வரைக்கும் நாங்கள் காத்திருந்தோம். உனது சொரசொரப்பான குரலைக் கேட்க நாங்கள் விரும்பினோம். உன்னை எம்மிடமிருந்து பறித்துக்கொண்டு செல்ல முன்பு உனக்கிருந்த வெடிச் சிரிப்பு ஓசையைக் கேட்கக் காத்திருந்தோம். உனக்கு கிச்சுகிச்சு மூட்டி நீ சிரிப்பதைக் காண நாங்கள் விரும்பினோம். எனினும் நீ எவ்விதச் சலனமுமின்றிக் காணப்பட்டாய். நீ எம்மை அச்சத்தோடு பார்த்துக் கொண்டிருந்தாய். நீ இப்போது வளர்ந்து விட்டிருந்தாய். அணிந்திருந்த நீலப் பூச் சட்டைக்கு மேலால் உனது மார்புகள் சிறிதாக புடைத்து வந்திருந்தன.

நாங்கள் உனக்கு வாழ்த்துக்களைத் தெரிவித்தோம். உன்னைக் கண்டதுமே நாங்கள் ஆண்டவனுக்கு நன்றி தெரிவித்தோம். பதிலாக நீ எதுவுமே கூறவில்லை. எம்மைப் பார்த்துக் கொண்டிருப்பதை மாத்திரமே செய்தாய். உனது விழிகள் பிரகாசிப்பதை நாங்கள் அவதானித்தோம். திரும்பி வந்தது குறித்து நீ மகிழ்ச்சியடைந்திருப்பது எமக்கு விளங்கியது. எம்மைக் காணக் கிடைத்தது குறித்து நீ மகிழ்ச்சியடைந்திருந்த விதம் எமக்குத் தென்பட்டது.

அன்றிரவு அம்மா அவளது படுக்கையில் அழுது கொண்டிருந்தாள். எந்த நேரத்திலாவது நீ அவளை 'அம்மா' என அழைக்கக் கூடுமென எண்ணியவாறு உனது பெயரைத் தொடர்ச்சியாக முணுமுணுத்துக் கொண்டிருந்தாள். நீ திரும்பி வந்தது குறித்து அவள் எவ்வளவோ மகிழ்ச்சியாகக் காணப்பட்ட போதிலும் அவள் அதைக் குறித்து எதுவுமே கூறவில்லை. நீ ஏதாவது கதைக்கக் கூடுமென அவள் காத்துக் கொண்டிருந்தாள். ஆமாம், உனது உடலினுள்ளே உனது ஆத்மா இருக்கிறது என்பதை நம்பச் செய்யக் கூடிய ஏதேனுமொன்று நிகழும் வரை அவள் காத்திருந்தாள். உனது ஆத்மாவுடன் சேர்த்து உனது குரலும் புதையுண்டு போய் விட்டதோ என எமக்கு அறிந்துகொள்ள வேண்டியிருந்தது. புதைத்த ஆத்மாவைத் திரும்ப எடுப்பது எவ்வாறென நாங்கள் எவருமே அறிந்திருக்கவில்லை. உனது ஆத்மா ஆறடி ஆழத்துக்குள் இல்லையென்பதை அறிந்துகொள்வதே எம் அனைவரதும் எதிர்பார்ப்பாக இருந்தது.

நீ உயிருடன் இருப்பதைக் காண்பதே எமக்கு



குறித்து அவர்கள் அந்தளவு விருப்பத்தோடு இருக்கவில்லை. அவர்களில் சிலர் இப்போதும் வானொலியை நெருங்கியமர்ந்து லாபல்பினி, வானொலியில் அவர்களது பிள்ளைகளின் பெயர்களைக் கூறும்வரை காத்துக் கொண்டிருக்கிறார்கள். சரியாகச் சொன்னால், கிராமத்துத் தலைவர், மஞ்சள் சோளக் களியும் அவரைக்காயும் வழங்குவதற்காக எம்மைப் பெயர் கூறி அழைக்கும்வரை காத்துக் கொண்டிருந்தது போல.

இப்போது நாங்கள் தரையைக் கொத்துவதில்லை, லமுனு. மண்வெட்டியொன்றைப் பிடிப்பது எப்படியென்றுகூட எமது பிள்ளைகளுக்குத் தெரியவில்லை. வேர்க்கடலைச் செடி எவ்வாறிருக்கும் என்பதை அவர்கள் மறந்துவிட்டார்கள். இப்போதெல்லாம் தரையைத் தோண்டுவது எமது பிள்ளைகளை அடக்கம் செய்வதற்காக மாத்திரம்தான். எமது காணியில் கூடாரங்கள் மட்டுமே மேலெழுகின்றன. நாங்கள் இப்போது முகாமில் வசித்து வருகிறோம். உள்நாட்டில் இடம்பெயர்ந்த மக்களின் முகாம் என இது அழைக்கப்படுவதாக கிராமத்துத் தலைவர் கூறினார். வானத்திலிருந்து பார்க்கும்போது எமது முகாம் காளான் பண்ணையொன்றைப் போல தென்படக்கூடும். எம்முடன் எஞ்சியிருப்பதெல்லாம் வெற்றுக் கூடாரங்களில் வசிக்கும் வெற்று மனிதர்கள் சிலர் மாத்திரம்தான். அவர்களுடைய ஆத்மாக்களும் ஒன்றோ புதைக்கப்பட்டிருக்கின்றன அல்லது எங்கோ கால்போன போக்கில் போய் விட்டிருக்கின்றன.

கூடாரங்களைப் பார் லமுனு. உன்னால் புரிந்துகொள்ள முடியுமென நாங்கள் ஒருபோதும் எதிர்பார்க்கும் விடயமல்ல இது. ஆமாம், உன்னால் அடையாளம் காண முடியுமான இடமல்ல இது. உன்னை விடுவோம். எமக்குக்கூட விளங்கிக்கொள்ள முடியாத விடயம் இது. இதுதான் எமது வீடு. உனக்கு எப்படிப் புரிய வைப்பது என எமக்குத் தெரியவில்லை. இது எமக்கு அடைக்கலம் கொடுத்திருக்கிறது. ஆகவே, இதுதான் நாம் வசிக்கும் வீடு. எம்மை மனம்பிறழச் செய்யாதிருப்பது இதுதான். இது வெறும் கூடாரம் மாத்திரம்தான். புற்களாலும் செங்கற்களாலும் எமது நிர்வாணத்தை மறைக்கும் நான்கு சுவர்கள் கொண்ட வெற்றுக் கூடாரம். லதீமும் அவனது அயலவர்களும் இங்கு கூடாரங்களை அமைத்தபோது அலொகொலும் பிரதேசம் மிகவும் பாதுகாப்பான இடம் எனக் கூறினார்கள். இனிமேல் பிள்ளைகள் கடத்திச் செல்லப்பட மாட்டார்கள், எமது பெண்கள் துஷ்பிரயோகத்துக்கு உட்படுத்தப்பட மாட்டார்கள்

அவசியமாக இருந்தது. உனக்கு பதினைந்து வயதுதான் என்ற போதிலும், இப்போதும் உனக்குள்ளே மருத்துவராகும் ஆசையிருக்கிறதா என்பதை அறிந்துகொள்ள நாங்கள் விரும்பினோம். நீ மீண்டும் சிரிப்பதைக் காண விரும்பினோம். சிறு வயதில் உனக்கு அம்மா தண்ணீரைக் கொடுத்து நடனமாடிக் காட்டும்போது உனது கண்களில் தோன்றும் பிரகாசத்தைக் காண நாங்கள் விரும்பினோம். நீ எங்களை அடையாளம் கண்டுகொண்டாய் என்பதைக் காட்டும் ஏதேனுமொன்று எமக்குத் தேவைப்பட்டது. உன்னை மகிழ்வுடன் வைத்திருக்கக் கூடிய மிகச் சிறந்தவற்றைச் செய்ய நாங்கள் விரும்பினோம்.

அம்மா திரும்பவும் வண்ணத்துப் பூச்சிகள் குறித்து கதைக்கவேயில்லை. வண்ணத்துப் பூச்சிக் கனவுகள் குறித்து எவையும் மீண்டும் எமது காதில் விழவேயில்லை. வண்ணத்துப் பூச்சிகள் வந்து அம்மாவிடம் ஏதேனும் கூறினால் நன்றாக இருக்குமென நாங்கள் பார்த்திருந்தோம்.

நீ எமது புதிய வீட்டை கூர்ந்து அவதானித்துக் கொண்டிருந்தாய். அது எம்மை விடவும் உனக்குப் புதியதுதானே. எமது அயலவர்கள் உன்னை அறுவெறுப்போடு பார்த்துக் கொண்டிருப்பதை நாங்கள் கண்டோம். நீ திரும்பி வந்தது

என்றார்கள். சாப்பிடவும் ஏதேனும் கிடைக்கும் என்றார்கள். பிறகு அந்த நம்பிக்கையில்தான் எதிர்பார்ப்புகளையும் கனவுகளையும் மாத்திரம் மனதில் சுமந்தவாறு நாங்கள் பலரும் எமது காணியில் கூடாரங்களை அமைத்துக்கொண்டோம். அதனைத் தொடர்ந்து எமது காணியில் கூடாரங்களை அமைக்க அனைவருக்கும் தேவைப்பட்டது. எம்மால் அதற்கு மேலும் நிலத்தைக் கொத்த முடியவில்லை. உணவுகள் எதுவும் இருக்கவுமில்லை. உகாண்டா வரைபடத்தில் எமது வீடும் காணியும் முகாமொன்றாக அடையாளமிடப்பட்டிருப்பதைக் குறித்து பின்னர்தான் நாங்கள் அறிந்துகொண்டோம்.

எம்மை அப்படிப் பார்க்காதே, லமுனு. ஆமாம், நாங்கள் இப்போது மஞ்சள் சோளக் களியைத்தான் உணவாக உட்கொள்கிறோம். யுத்தத்துக்கு முன்பு அப்பாவின் வேட்டை நாயான பிகோவுக்கு அம்மா உணவாகக் கொடுத்த அதே களிதான். ஆமாம், இப்போதெல்லாம் கிராமத்துத் தலைவர் எமக்கு மரக்கறி எண்ணெய்யும் அவரையும் மஞ்சள் சோளக் களியும் தரும்வரை காத்துக் கொண்டிருக்கிறோம். அவர் தருபவை சில வேளைகளில் எமக்கு தொட்டுக்கொள்ளக்கூட போதாமலிருக்கும். சில வேளைகளில் கிராமத்துத் தலைவர் வரவே மாட்டார். ஒரு தடவை வயிற்றில் பூச்சிகள் கத்துவதைத் தாங்க முடியாமல் சாப்பிட ஏதாவது தேடிக்கொண்டு வரவென நாங்கள் முகாமை விட்டு பதுங்கிப் பதுங்கி வெளியே சென்றோம். ஆமாம், சொட்டுப் போல ஏதாவது கிடைத்தாலும் பரவாயில்லை. காட்டுச் செடிகளாவது, குறைந்த பட்சம் புளிச்சக் கீரையாவது, ஏதாவதொன்று. எமது மூதாதையர்கள் சாப்பிட நினைத்தும் பார்த்திராத ஏதாவது கிடைத்தாலும் பரவாயில்லை. அப்போதுதான் நாங்கள் காவல் காத்துக் கொண்டிருந்த படையினரிடம் மாட்டிக்கொண்டோம். அவர்கள் எம்மை முகாமைவிட்டு வெளியே செல்ல அனுமதிக்கவில்லை. நாங்கள் ஏனென்று கேட்டோம். கிளர்ச்சியாளர்களால் இனி மேலும் நாங்கள் கடத்தப்படுவதை அனுமதிக்க முடியாது என்றார்கள். அன்புக்குரியவளே, இந் நாட்களில் அவர்கள் எவரையும் கடத்திச் சென்று விடுகிறார்கள். போரின் போது நிமிர்ந்து நின்றுகொண்டு துப்பாக்கி வேட்டுகளை உடலில் தாங்கக் கூடிய எவரையும்.

எமது லமுனுவைக் கடத்திச் சென்ற போது நீங்கள் அனைவரும் எங்கிருந்தீர்களென நாங்கள் படையினரிடம் கேட்டோம். எமது சிறுவர், சிறுமியரை கிளர்ச்சியாளர்கள் கடத்திக்கொண்டு சென்ற போது எங்கிருந்தீர்கள் என்று கேட்டோம். அவர்கள் வந்து எமது பெண்களை எமது கண் முன்னாலே துஷ்பிரயோகம் செய்த போது நீங்கள் எல்லோரும் எங்கு தொலைந்து போயிருந்தீர்கள் என்று கேட்டோம். அவர்களுக்கு அப்போது சம்பளம் வழங்கப்பட்டிருக்கவில்லை என்று அவர்கள் கூறினார்கள். நீங்கள் நாசமாப் போக! என்று நாங்கள் சாபமிட்டோம். எம்மை உணவு தேடிச் செல்ல விடுங்கள் என்றோம். அதன்பிறகு அவர்கள் தடிகளை எடுத்துக்கொண்டு வந்து பள்ளிக்கூடப் பிள்ளைகளை அடிப்பது போல எம்மைத் தாக்கினார்கள்.

நீ கனவில் கதைத்தாய். உனது களிமண் படுக்கையில் உருண்டுருண்டு, நெளிந்து நெளிந்து நீ கதைத்தாய். நாங்கள் உனது கைகளைப் பற்றிக்கொண்டோம். நீ பிரசவ வலியில் துடித்துக் கொண்டிருக்கும் பெண்ணொருத்தியைப் போல துடித்துக் கொண்டிருந்தாய். நீ பூதங்கள் குறித்து கதைத்தாய். அடிலாங்கில் வைத்து நீ தப்பித்து வர முற்படுகையில் உன்னைத் துரத்திக்கொண்டு வந்த கிளர்ச்சியாளர்கள் குறித்து உளறினாய். உனது தோழியான அகேல்லோ தப்பிச்செல்ல முற்பட்ட காரணத்தால் கிளர்ச்சியாளர்கள் உன்னைக் கொண்டும் உனது குழுவினரைக் கொண்டும் அவளை அடித்துக் கொல்ல நிர்ப்பந்தித்தது குறித்து நீ கூறினாய். அவளைக் கொல்ல உனக்கு எவ்விதத் தேவையும் இருக்கவில்லை என நீ தெரிவித்தாய். 'ஒருவரையும் கொல்லக் கூடாது' என்ற கட்டளையின் வரிகள் உனக்கு நினைவிருந்தன. அவளுக்கு எதிராகக் கையை உயர்த்தக்கூட நீ விரும்பவில்லை என்று நீ கூறினாய். யாரையும் நோகடிக்க உனக்குத் தேவைப்படவில்லை. தடிகளால் அகேல்லோ மூடப்பட்டிருந்த விதத்தை, அவளது வாயிலிருந்து குருதி பீறிட்டு வழிந்த விதத்தை, மூத்த கிளர்ச்சியாளர்கள் அவள் மரித்து விட்டாளா எனப் பார்த்த விதத்தை, நீ கண்ணுற்றதாகக் கூறினாய். உனக்கு குமட்டிக்கொண்டு வந்தது. நீ வாந்தியெடுக்க முற்பட்டாய். எனினும் வாயிலிருந்து வெளியே வர எதுவுமிருக்கவில்லை. முகாமில் திருட்டுத்தனமாக உட்கொண்ட பச்சை மரவள்ளிக் கிழங்கும் அவித்த கோழியிறைச்சியும் அவ்வேளையில் செரித்து உறிஞ்சிக்கொள்ளப்பட்டும் இருக்கும்.

நீ கூறுவதையெல்லாம் நாங்கள் கேட்டுக் கொண்டிருந்தோம். உனது துயரத்தைப் பங்கிட்டுக்கொண்டு அனுபவிக்க நாங்கள் முற்பட்டோம். நீ என்னவெல்லாம் அறிந்திருக்கிறாய் என்பதைத் தெரிந்துகொள்ள விரும்பினோம். நாங்கள் உனது கைக்கு ஒத்தடமளித்தோம். நீ மனதுக்குள் சிறைப்படுத்தி வைத்திருக்கும் விடயங்களை வெளியே எடுப்பதே எமது தேவையாகவிருந்தது. நீ எமக்கு உனது கரங்களுக்கு ஒத்தடம் கொடுக்க இடமளித்தாய். குருதி பீறிட்டதைக் கண்டு நீ முகம் வாடக்கூட இல்லையென நீ கூறினாய். உனது துயரங்கள் அனைத்தையும் வெளியே இழுத்தெடுத்து அகற்ற எம்மால் முடியாமல் போனது.

பெருமழையில் நீ இன்று நனைந்து கொண்டிருந்ததை நாங்கள் பார்த்துக் கொண்டிருந்தோம். பெரும் மழைத் துளிகள் உன் மீது விழுந்த போது நீ சிலை போல அசையாதிருந்தாய். பேரோசையோடு இடி, மின்னல் வெட்டிய போதும் நீ அப்படியே இருந்தாய். நாங்கள் உனக்காகக் கூடாரத்துக்குள் இடத்தையும் ஆடையையும் வைத்துக்கொண்டு காத்திருந்தோம். நீ ஏதாவது கூறுவாயென நாங்கள் நினைத்தோம். நாங்கள் உன்னைத் தொந்தரவு செய்யவில்லை.

மழை, தூறலாக மாறத் தொடங்கியதும் நீ வீட்டுக்குள் வந்தாய். நீ வெதுவெதுப்பான ஆடைகளைக் கையில் வைத்துக்கொண்டிருந்த அம்மாவைக் கடந்து வந்து ஈர ஆடையோடே அமர்ந்துகொண்டாய். உனது



கிளர்ச்சியாளர்கள் எமது வீட்டுக்கு வந்த விதம் எமக்கு நேற்று நடந்ததைப் போல இப்போதும் நினைவிருக்கிறது, லமுனு. அதைப் போல பல இரவுகள் தொடர்ந்து வரப் போவதைக் குறித்து, அன்றிரவுதான் நாங்கள் அறிந்துகொண்டோம். துப்பாக்கிப் பிடிகளால் மக்களின் தலையில் தாக்கும் சப்தங்கள், ஓலமிடும் குரல்கள், எமது பிள்ளைகளை எமது சொந்த வீடுகளிலிருந்து பலவந்தமாக இழுத்துச் செல்லும் ஓசைகள் எமக்குக் கேட்டன. நாங்கள் நாதியற்று பரிதவித்தவாறு நின்றிருந்தோம்.

நீ தூக்கக் கலக்கத்தில் இருந்தாய். உன்னை விடவும் வேண்டுமென்றால் ஓரிரு வருடங்கள் மூத்த கிளர்ச்சியாளர்கள் உனது கையைப் பிடித்து இழுத்தார்கள். நீயொரு டீசேர்ட்டை மாத்திரமே அணிந்திருந்தாய். நீ அணிந்துகொள்ளவென அம்மா உனக்கொரு பாவாடையை எடுத்து வந்தாள். அது உன் கைகளில் இருந்தபோதே, உன்னை வீட்டிலிருந்து வெளியே இழுத்துச் சென்றார்கள்.

அம்மாவின் அழுகை ஒப்பாரிகளுக்கும் கெஞ்சும் புலம்பல்களுக்கும் அவர்கள் துப்பாக்கிப் பிடிகளால் தலையிலடித்து பதிலளித்தார்கள். உனக்குப் பதிலாக அவளைக் கொண்டு செல்லுமாறு அவள் அவர்களிடம் வேண்டி நின்றாள். ஆனால், அவர்கள் அம்மாவுக்குப் பதிலாக மருந்துகளைத்தான் கேட்டார்கள். அம்மா, நகரத் திலிருந்த அரச மருத்துவமனையிலிருந்து கொண்டு வரும் மருந்துகள் அவர்களுக்குத் தேவைப்பட்டன. அம்மாவுக்கு இயலுமாக இருந்திருந்தால் ஒருபோதும் உன்னைக் கொண்டுசெல்ல விட்டிருக்க மாட்டாள், லமுனு. அப்போதுதான் உனக்கு பதினொரு வயது பிறந்திருந்தது. ஆரம்ப வகுப்புகளுக்கான இறுதிப் பரீட்சைக்காகப் படித்துக் கொண்டிருந்தாய். எதிர்காலத்தில் ஒரு வைத்தியராக வர வேண்டுமென்று நீ விரும்பியிருந்தாய். அம்மாவைப் போலத் தாதியாக ஆகாமல், வைத்தியரொருவராக ஆகி அப்பாவி மக்களுக்கு சேவை செய்ய வேண்டும் என நீ கூறிக் கொண்டேயிருந்தாய்.

உன் வயதையொத்த வயதிலிருந்த சிறுவர்களையும் சிறுமிகளையும் தேடித் தேடி அவர்கள் கடிகாடி கிராமத்தின் அனைத்துவீடுகளுக்கும்சென்றிருந்தார்கள் என்பதை நாங்கள் பின்னர் அறிந்துகொண்டோம். கிளர்ச்சியாளர்கள் சிறு பிள்ளைகளை போருக்குப் பயிற்றுவிக்கிறார்கள் என அவர்கள் கூறினார்கள். அவ்வாறே ஏனைய பிள்ளைகளை ஏமாற்றிக் கூட்டி வரவும் பயிற்றுவிக்கிறார்கள் எனவும் தெரிவித்தார்கள். அகோலியை மீட்டெடுக்கும் பெரும் போருக்காகக் கொண்டு செல்லப்படுவதாகவும் அறியக்

உடலினுள்ளே ஏதோவொரு பெரிய மாற்றம் நிகழ்ந்திருப்பதை நாங்கள் அறிந்துகொண்டோம். மழைக்கு உனது இரத்தத்தைக் கழுவிச் செல்ல நீ இடம் கொடுத்திருந்தாய். உனது கால் வழியே சிறியதொரு கோடாக குருதி வழிந்தோடுவதை நாங்கள் கண்டோம். அம்மாவின் கண்களில் கண்ணீர் பெருக்கெடுத்ததை நீ காணவில்லை.

அன்று பின்னேரமான போது நீ வாய்க்குள் சாபமிடுவதை நாங்கள் கேட்டுக் கொண்டிருந்தோம். அரசாங்கத்தின் போர் விமானங்கள் கடிகாடிக்கு மேலால் பறந்ததைக் கேட்ட போதெல்லாம் நீ நடுங்கிக் கொண்டிருந்ததை நாங்கள் கண்டோம். நீ கைவிட்டு வந்த உனது குழுவினரைக் குறித்து நீ கவலைப்படுவதை நாங்கள் அறிந்துகொண்டோம். விமானங்கள் கிளர்ச்சியாளர்களைத் துரத்தும்போது என்ன நடக்குமென்பதை நீ அறிந்திருந்தாய். நாங்கள் உன்னிடம் அந்தக் கதைகள் எவற்றையுமே கேட்கவில்லை. அனேனா, ஆயா, பொங்கொமின், யெகோ, ஆயாத், லாலம், ஔமா, ஒசெங், ஒடிம், ஒலேம், உமா, அடெங், அக்வேரோ, லேகர், ஒடொங், லன்சேரோ, லாடு, டிமி, காடி இவர்கள் அனைவரும் எமக்கு அந்தக் கதைகளைக் கூறியிருந்தார்கள்.

கிடைத்தது. ஆட்சியைக் கவிழ்த்தல், முஸவேனியின் ஆட்சியைத் தோற்கடித்தல், இவற்றின் அர்த்தம் என்னவென்று நாங்கள் அறிந்திருக்கவில்லை. எவரிடமாவது கேட்கவேண்டும் என்ற தேவையும் எமக்கிருக்கவில்லை. நாங்கள் அறிந்திருந்த ஒன்றே ஒன்று, எம்மில் எவர்க்கும் எமது பிள்ளைகளை யுத்தத்துக்கு அனுப்பத் தேவைப்படவில்லை என்பதுதான்.

அக்காலத்தில், நீ பள்ளிக்கூடத்துக்குச் செல்லத் தயாராவதை நாங்கள் பார்த்துக் கொண்டிருந்தது இப்போதும் எமக்கு நினைவிருக்கிறது. ஏதோவொரு விஷேட சடங்கை நிறைவேற்றச் செல்வதைப் போல நீ தயாராகுவாய். பல் விளக்கி, குளித்துக் கொள்வாய். பீப்பாயிலிருந்து கவனமாகத் தண்ணீரை எடுத்து உடலில் ஊற்றிக் கொள்வாய். அம்மா சமைத்துக் கொடுக்கும் காலையுணவை, பள்ளிக்கூடத்துக்குச் செல்லத் தாமதிக்கும் என்று நீ உட்கொள்ளாது சுற்றியெடுத்து பையில் போட்டுக்கொள்வாய். போர் தொடங்கியதுமே பிள்ளைகள் எவரும் பள்ளிக்கூடத்துக்கு வராமல் நின்றபோதும் நீ தினந்தோறும் பள்ளிக்கூடம் சென்றாய். பள்ளிக்கூடத்துக்குச் சென்று அங்கு ஆசிரியரோ, மாணவர்களோ எவருமில்லாத காரணத்தால் வீட்டுக்குத் திரும்பி வர நேர்ந்த தினங்களில் நீ ஆசிரியர்களைச் சபித்தாய், அவர்களை கோழைகள் எனத் திட்டினாய். போர் உக்கிரமாக நடைபெற்றுக் கொண்டிருந்த நாட்களிலும்கூட நீ பள்ளிக்கூடம் சென்றாய். பள்ளிக்கூடத்தில் எவரும் இருக்கவில்லை என்று நீ சிறிதும் பின்வாங்கவில்லை.

போரின் காரணமாக வடக்கு உகாண்டாவிலுள்ள பிள்ளைகளுக்கு மாத்திரமே கல்வி கற்க வழியில்லாமல் போவதாகவும், நாட்டின் ஏனைய பகுதிகளிலுள்ள பிள்ளைகள் பள்ளிக்கூடம் செல்வதாகவும் நீ கூறிக் கொண்டேயிருந்தாய். அனைவருக்கும் பரீட்சைகளும் ஒன்று போலவே நடத்தப்பட்டன. அனைவரும் காடுகளுக்குள் ஒளிந்துகொண்ட போதிலும் நீ பள்ளிக்கூடம் போய் வந்தாய். பள்ளிக்கூடம் போகாதிருக்குமாறு அம்மா உன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டாள். பள்ளிக்கூடத்துக்குப் போகும் வழியில் கிளர்ச்சியாளர்கள் பிள்ளைகளைக் கடத்திச் செல்வதாக அம்மா பயந்தாள். ஆனாலும் நீ எப்போதும் எப்படியாவது பள்ளிக்கூடம் போனாய். எனினும் அங்கு ஆளற்ற வகுப்பறைகளே காணப்பட்டன. சிதைந்து போன எதிர்பார்ப்புகளோடு நீ வீடு திரும்பினாய். பிறகு, அம்மாவே உனது ஆசிரியை ஆனாள். அப்போதைய உனது வயதுக்குத் தேவைப்படாத போதிலும், அம்மா உனக்கு இனப்பெருக்கம் குறித்துக்கூட கற்றுக் கொடுத்தாள். கல்வி கற்பதில் உனக்கு விந்தையானதொரு ஆர்வம் இருந்தது. ஒரு எழுத்துக்கூட எழுதப் படிக்கத் தெரியாத அப்பாவுக்குக்கூட உனக்கு நன்றாகக் கற்பிப்பதே தேவையாகவிருந்தது.

லமுனு, அப்பா இப்போது நம்மிடையே இல்லை என்பதை உன்னிடம் எப்படிக் கூறுவதென எமக்குத் தெரியவில்லை. அவரின் இல்லாமையை நீ உணர்ந்திருக்கக் கூடும். யாருக்காக நீ யுத்தம் செய்தாயோ அவர்களே அப்பாவைத் துண்டு துண்டுகளாக வெட்டிக் கொன்றார்கள் என்பதை நாம் எவ்வாறு உன்னிடம் கூறுவது? லாலோகியில் குத்தகைக்குப் பெற்று வேலை செய்து கொண்டிருந்த பயிர் நிலத்தில் வைத்து அவரைக் கொன்று போட்டிருந்தார்கள். அவருக்கும் அவரது குடும்பத்தாருக்கும் கிராமத்துத் தலைவர் உணவு கொண்டு வந்து தரும் வரையில் வெறுமனே பார்த்துக்கொண்டிருக்க முடியாதென அவர் கூறினார். அப்பாவைப் பற்றி உனக்குத் தெரியும்தானே. அவர் மிகவும் கௌரவமாக வாழ்ந்த மனிதர். ஒரு மனிதனின் பலத்தைக் காண்பிப்பது களஞ்சியத்தில் நிரப்பப்பட்டிருக்கும் தானியங்களின் அளவுதான் என அவர் நம்பினார். யுத்தத்துக்கு முன்னர் எமது களஞ்சியம் நிரம்பிக் காணப்பட்டது. அதைக் குறித்து எமது அயலவர்கள் பொறாமையால் துடித்தார்கள். அவர் ட்ரக்டரைப் போல மண்ணைக் கொத்திப் புரட்டினார். அவரது மாடுகள்தான் அலொகொலுமிலிருந்த மிகச் சிறந்த மாடுகள். அனைவருமே அவரிடமிருந்து பால் வாங்கத்தான் விரும்பினார்கள். சோம்பேறியான லுடுகாமொய்கூட காலை, பகல், இரவென தொடர்ச்சியாக நிலத்தைக் கொத்திப் புரட்டினார். எனினும் அப்பாவின் விளைச்சலின் பாதியளவையாவது பெற்றுக்கொள்ள அவரால் முடியாமல் போனது.

அப்பா நிலத்தைக் கொத்திக் கொண்டிருக்கையில் கிளர்ச்சியாளர்களிடம் சிக்கிக்கொண்டார். அனைவரையும் முகாமுக்குள் இருக்குமாறு உத்தரவிட்டிருக்கும் போது இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாயென அவர்கள் கேட்டார்கள். "ஒரு நல்ல ஆண்மகனென்பவன் தனது குடும்பத்தாருக்கு உணவளித்துப் பராமரிக்க வேண்டும்" என அவர் பதிலளித்தார். அவர் அவ்வளவு பலசாலியாக இருப்பாராயின் தம்முடன் இணைந்து யுத்தம் செய்ய வருமாறு அவர்கள் அவரிடம், கிண்டலாகக் கூறியிருக்கிறார்கள். தான் தொடங்கி வைக்காத போருக்குள் சிக்கிக்கொள்ள தனக்கு அவசியமில்லை என அவர் பதிலளித்திருக்கிறார். பத்துப் பேர் சேர்ந்து கையில் கிடைத்தவற்றையெல்லாம் கொண்டு அவரைத் தாக்கியிருந்தார்கள். அதன்பிறகு அவர்கள் அவரை துண்டு துண்டுகளாக வெட்டி வேறாக்கியிருந்தார்கள். உனக்குத் தெரியுமா, லம்னு? அப்பாவை நாங்கள் அடக்கம் செய்த நாளிலிருந்து இறைச்சி உணவுகளைச் சாப்பிடவேயில்லை. ஆமாம், இன்று வரைக்கும்.. ஒரு மனிதரை அவரது மரணத் தறுவாயிலும் இழிவுபடுத்த இன்னொரு மனிதரால் எவ்வாறு முடிகிறது என எம்மால் ஒருபோதும் புரிந்துகொள்ள முடியவில்லை.

இவையனைத்தையும் உன்னிடம் கூற எமக்குச் சக்தி கொடுக்குமாறு நாங்கள் ஒவ்வொரு நாளும் பிரார்த்தித்து வந்தோம். எப்போதாவது ஒரு நாள், யுத்தம் முடிவடைந்ததும், நீ உனது கதையை எம்மிடம் கூறுவாய். அப்போது நாங்கள் எமது கதையை உன்னிடம் கூறுவோம்.




போரானது அவர்களுக்கு அவசியமற்ற, விளங்கிக்கொள்ள முடியாத பல விடயங்களை அளித்திருப்பதை அவர்கள் புரிந்து கொண்டிருந்தார்கள். ஆகவே, சந்தேகத்துக்குரிய விடயங்களிலிருந்து விலகியிருக்க அவர்களுக்குத் தேவைப்பட்டது.

நீ பாடசாலைக்குச் சென்று தலைமையாசிரியரு டன் வாதித்ததை அறிந்துகொண்ட அம்மாவும் பாடசாலைக்கு ஓடி வந்தாள். நீ ஏன் அவளுடன் இதுவரை கதைக்கவில்லை என்பது அவளுக்கு ஆச்சரியத்தை அளித்திருந்தது. உனக்கு உதவி செய்ய அவள் விரும்பினாள். நீ பேசுவதைக் காண அவளுக்குத் தேவைப்பட்டது. அவள் ஒருபோதும் உன்னை வற்புறுத்தவில்லை. வெளியே கூற இயலாத போதிலும்கூட, அவள் உன்னை வெகுவாக நேசித்தாள்.

லெகோர் பாலர் பாடசாலை தலைமையாசிரியருடன் அம்மா கதைத்தாள். உனது பாடசாலைக் கட்டணங்களைத் தவணை முறையில் கட்ட இடமளிக்க தலைமையாசிரியர் இசைந்தார். உனக்கு இப்போதும் பாடசாலைக்குப் போக அவசியமாக இருப்பது குறித்து அம்மா மிகுந்த மகிழ்ச்சியடைந்திருப்பதாகக்கூறினாள்.

நீ நன்றி என்று கூறினாய். நீ அம்மாவுக்கு நன்றி தெரிவித்திருந்தாய். அதுதான் உன்னிடமிருந்து நாம் கேட்ட உனது முதல் வார்த்தை. எவ்வாறாயினும், நீ பேசிவிட்டாய் என்பது குறித்து எமக்கு அளவற்ற மகிழ்ச்சி. உன்னால் இன்னும் பல விடயங்களைக் கூற இயலுமாகும் என நாங்கள் எதிர்பார்க்கிறோம். அனேனா, ஆயா, பொங்கொமின், யெகோ, அயாத், லாலம், ஔமா, ஒசெங், ஒடிம், ஒலேம், உமா, அடெங், அக்வேரோ, லேகார், ஒடொங், லென்யோரோ, லாடு, டிமி.. இவர்கள் அனைவரையும் விடவும். அனைத்திற்கும் மேலாக உனது குரலைக் கேட்கத்தான் நாங்கள் காத்திருக்கிறோம்.

நீ பாடசாலைக்குப் போனதைக் குறித்து நாங்கள் அயலவர்களிடமிருந்து அறிந்துகொண்டோம். உன்னை ஆறாம் வகுப்பில் சேர்த்துக் கொள்ளுமாறு நீ தலைமையாசிரியரிடம் வேண்டியிருந்தாய். நீ கதைக்கத் தொடங்கி விட்டாய் என்பதை நாங்கள் அறிந்திருக்கவில்லை. எம்முடன் அல்லாவிட்டாலும்கூட, நீ எவ்வாறாயினும் கதைக்கத் தொடங்கியிருப்பது குறித்து நாங்கள் மகிழ்ச்சியடைந்தோம். தலைமையாசிரியர் எலும்பும் தோலுமான உனது மெலிந்த உடலைப் பார்த்துக் கொண்டிருந்தார். எதிர்காலத்தில் வைத்தியராக வர வேண்டுமென நீ அவரிடம் கூறினாய். பாடசாலைக் கட்டணத்தைச் செலுத்த உன்னால் முடியுமா என அவர் உன்னிடம் கேட்டார். நீ அதற்குப் பதிலளிக்கவில்லை. எம்மிடம் ஒரு சதம்கூட இருக்கவில்லை என்பதை நீ அறிந்திருந்தாய். அதெல்லாம் தெரியாது என்றும் படிப்பு மாத்திரமே தேவைப்படுவதாகவும் நீ கூறினாய். படித்து முடித்த பிறகு மொத்தமாகக் கட்டணத்தைச் செலுத்துவதாகவும் நீ கூறினாய்.

அவர் உன்னை நாலாம் வகுப்பில் சேர்த்துக் கொண்டார். ஏனைய மாணவர்கள் உன்னை அமைதியாகப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். உனக்குப் பைத்தியம் பிடித்திருப்பதாக அவர்கள் நினைத்துக் கொண்டார்கள். நீ அவர்களைத் தாக்கக் கூடும் எனப் பயந்த அந்தப் பிள்ளைகள் மெல்லிய குரலில் முணுமுணுக்கத் தொடங்கினார்கள்.

புதிய சீருடை உனக்கு மிகவும் அழகாக இருக்கிறது. கடத்திச் செல்லப்பட்ட பிள்ளைகளுக்காக இயங்கி வரும் லெகோர் பாலர் பாடசாலையின் தலைமையாசிரியர் உனக்கு இந்தச் சீருடையை அன்பளிப்பாகத் தந்திருந்தார். அவர்கள் உன்னைக் கவனமாகப் பார்த்துக்கொள்வார்கள் எனவும் அம்மா கூறினாள். அங்கிருந்த அநேகமான பிள்ளைகள் உன்னைப் போன்றவர்கள்தான். அவர்களும்கூட பிள்ளைகளைச் சித்திரவதைக்குட்படுத்தி, கொலை செய்திருந்தார்கள். அவர்களும்கூட ஒருபோதும் விளங்கிக்கொள்ள முடியாத யுத்தத்தில் போரிட்டிருந்தார்கள். ஆசிரியர்கள் உன்னைக் கவனமாகப் பார்த்துக் கொள்வார்களென அம்மா கூறினாள். அவர்கள் அதற்காக சிறப்பாகப்

பயிற்றுவிக்கப்பட்டிருக்கிறார்களாம்.

நீ மகிழ்ச்சியாகக் காணப்பட்டாய். நீ விடிகாலையிலேயே எழுந்திருந்ததை நாங்கள் கண்டோம். நீ பைக்குள் புதிய புத்தகங்களை அடுக்கினாய். புத்தகங்களின் அட்டைகளில் நீ உனது பெயரை அழகாக எழுதியிருந்தாய்.

உனது கனவுகள் நனவாகும் என்பதை நாம் அறிவோம். எப்போதாவது ஒரு நாள் நீ வைத்தியர் ஆகுவாய். ஆமாம், அம்மா செய்தது போலவே மக்களுக்கு சேவைகள் செய்ய. ஆனால், வெண்ணிறக் கோட் அணிந்தவாறு.

அம்மாவின் கண்களில் கண்ணீர் நிறைந்திருந்தது. நீ மறுபக்கம் திரும்பிக்கொண்டாய். அது ஆனந்தக் கண்ணீர் என்பதை நீ அறிவாய் என்பது எமக்குத் தெரியும்.

பியட்றிஸ் லம்வாகா, உகாண்டா குடியரசைச் சேர்ந்த பெண் எழுத்தாளர். உகாண்டா மெகரேரே பல்கலைக்கழகத்தின் ஆங்கில இலக்கிய சிறப்புப் பட்டதாரியும், மனித உரிமைகள் கற்கையில் முதுகலைப் பட்டதாரியும் ஆவார். தற்காலத்தில் உகாண்டா மக்கள் எதிர்கொண்டு வரும் வாழ்க்கைச் சிக்கல்களை, குறிப்பாக யுத்தங்களும் கலவரங்களும் மக்களிடையே ஏற்படுத்தும் தாக்கங்களை தமது படைப்புகளின் கருவாகக்கொண்டு இவர் எழுதி வருகிறார். ஆங்கில மொழியில் நாவல், சிறுகதைகள், கவிதைகள் ஆகியவற்றை எழுதி சர்வதேச ரீதியில் பல இலக்கிய விருதுகளை வென்றிருக்கிறார். 'வண்ணத்துப் பூச்சிக் கனவுகள்' எனும் இச் சிறுகதையானது, இவரது குறிப்பிடத்தக்க படைப்புகளில் ஒன்றாகும். இது சமகால உகாண்டா சமூகத்தின் இருண்ட பகுதிகளை அப்பட்டமாக வெளிப்படுத்துவதாக விமர்சகர்கள் குறிப்பிடுகிறார்கள்.

எம். ரிஷான் ஷெரீப்
<mrishanshareef@gmail.com>

## அம்ருதா பதிப்பக வெளியீடுகள்




Rs. 150




Rs. 140




Rs. 90




Rs. 90




Rs. 90




Rs. 90




Rs. 100




Rs. 80




Rs. 170

**அம்ருதா**

#1, கோவிந்த் ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 மூன்றாவது முக்கிய சாலை 2ஆம் விரிவாக்கம், சி.ஐ.டி. நகர் கிழக்கு, நந்தனம், சென்னை 600 035. தொலைபேசி: 73387 57878, 94440 70000

மின்னஞ்சல்: **info.amrudha@gmail.com, www.amruthamagazine.com**

# சா சா சாவு

## ஷங்கர்ராமசுப்ரமணியன்

பிறந்து உலகின் விவரங்கள் சிறிது சிறிதாகத் தெரிய தொடங்கிய நாள் முதலாக மரணத்தைப் பார்த்துக்கொண்டேதான் இருக்கிறோம் என்று நினைக்கிறோம். ஆனால், உண்மையில் மரணங்களைப் பார்ப்பதன் வழியாக மரணத்தை நாம் உணர்வதில்லை; ஒவ்வொரு மரணத்தையும் சுற்றி இருக்கும் உயிர்ப்பு, உயிர்த் தன்மை, உயிர்கள் தான் நம் கண்களுக்குத் தெரிகிறது. இங்கே ஒருவர் இறந்து ஒருவர் இருக்கும் குரூரத்தின் உயிர்ப்பைத்தான் பிறரின் மரணத்தில் அனுபவிக்கிறோம். இறுதிச் சடங்குகளில் சவப்பெட்டியோடு சணலில் கட்டப்பட்டு பயணிக்கும் பறவை துள்ளி சவ வண்டியில் அலைவதைப் போன்ற உயிர்ப்பைத்தான், ரகசிய ஆசுவாசத்தைத்தான் நமக்கு இன்னொருவரின் மரணம் தருகிறது.

சாவை மொழிவழி அனுபவமாக்கி, சாவை உண்மையாகத் தெரிந்துகொள்வதற்கு எனக்கு உதவியவர் நகுலன்தான். 'இந்த உலகத்தில் விளங்கும் ஒரு சாவு மட்டுமல்ல சாவு' என்று எனக்குச் சொன்னவரும் நகுலன்தான். வாழ்வளவுக்கு சாவும் சாவின் ருசிகளும் பலவிதம் என்று உரைத்தவர் நகுலன். இருந்து இருக்கும் சாவு, சுகமுள்ள சாவு, தன்னைக் கழற்றிப் போட்ட சாவு, தன் கரைதலில் நிகழும் சாவு, கண்கள் கண்ணாடியாகும் போது சுயம் கண்ணாடியாக ஆகும்போது வரும் சாவு என்று அவர் அனுபவிக்கத் தரும் சாவுகள் அத்தனை.

எந்திரப் பொறியியலில் டிப்ளமோ படித்து முடித்து அதுசார்ந்த வேலை எதிலும் தரிக்க முடியாமல், வேறு எந்த வேலைக்கும் என்னைத் தயார்ப்படுத்தியும் கொள்ளாமல், திருநெல்வேலியிலிருந்த நாட்கள் அவை. காப்ரியேல் கார்சியா மார்க்வேஸின் 'கர்னலுக்கு யாரும் எழுதுவதில்லை' குறுநாவலில் வரும் கர்னலைப் போன்றே வராத ஒன்றுக்காகக் காத்திருந்தேன். வாசிப்பும் படைப்பு சார்ந்த கனவுகளையும் தவிர வெளியே புலப்படும்படியாக ஒன்றும் ஒரு வாக்குறுதியும் என்னிடம் இல்லை. வீட்டிலும் இருக்க முடியாமல் வெளியிலும் தரிக்க முடியாமல் அப்பாவின் கடுஞ் சொல்லுக்கும் அம்மாவின் கரிசனைக்கும் வேதனைக்கும் நடுவே குற்றவுணர்வோடு சுற்றிய வெயில் நாட்களில் ஒன்றில்தான் நகுலன் என் வீட்டுக்கு ஒரு கடிதம் வழியாக வந்திருந்தார்.



அப்போது திருநெல்வேலிக்கு இடம் மாறியிருந்த கவிஞர் மனுஷ்ய புத்திரன், விடுமுறையில் துவரங்குறிச்சிக்குப் போயிருந்த நாட்களில் அவரிடமிருந்து வந்த ரோஸ் கலர் இன்லேண்டு கடிதத்தில்தான் நகுலனின் 'வண்ணத்துப் பூச்சிகள்' கவிதை குறிப்பிடப்பட்டிருந்தது. மனுஷ்யபுத்திரன் கடிதத்தில் வேறு என்ன எழுதியிருந்தார் என்று எனக்கு இப்போது ஞாபகத்தில் இல்லை. ஆனால், அவர் கொண்டிருந்த மனநிலை அந்தக் கவிதையிலிருந்தது. எங்கோ போய்விட்டு சாயங்காலம் வீடு திரும்பிய எனக்கு அந்தக் கடிதம் பெரிய ஆறுதலையும் அரவணைப்பையும் தந்தது. நகுலன் தன் மொழியின் வழியாக செலுத்திய நஞ்சு அந்தச் சாயங்காலத்தை மிகவும் போதையாக்கியது. நகுலன் கவிதையில் வரும் அரளிப்பாலை அருந்தும் பறவை ஆனேன். இதுதான் கவிதை.

> உண்ணூனிப் பிள்ளைக்குக் கண்வலி
> கேசவ மாதவன் ஊரில் இல்லை. சிவனைப்
> பற்றித் தகவல் கிடைக்கவில்லை. நவீனன்
> விருப்பப்படி அவன் இறந்த பிறகு அவன்
> பிரேதத்தை அவன் உற்ற நண்பர்கள்
> நீளமாக ஒரு குழி வெட்டி அவனை
> அதில் தலைகீழாக நிறுத்தி வைத்து
> அடக்கம் செய்துவிட்டார்கள். எங்கும்
> அமைதி சூழ்ந்திருக்கிறது. வெயிலில்
> வண்ணாத்திப் பூச்சிகள் பறந்து
> கொண்டிருக்கின்றன.

இந்தக் கவிதையில் என்னைப் பாதித்த வரிகள் அப்போது, 'வெயிலில் வண்ணாத்திப் பூச்சிகள் பறந்து கொண்டிருக்கின்றன' என்பது மட்டும்தான்.

அந்த வரிகளைச் சுற்றி ஒரு நிசப்தம்; பெரும் அமைதி; ஒரு இணக்கமான விபரீத உணர்வை இந்தக் கவிதை தந்தது. மனுஷ்யபுத்திரன் இந்தக் கவிதை முழுவதையும் எழுதியிருந்தாரா அல்லது என்னைப் பாதித்த வரியை மட்டும் எழுதியிருந்தாரா என்று எனக்கு இப்போது துல்லியமாகச் சொல்ல முடியவில்லை. ஆனால், அந்த வரிகளைச் சூழ மரணம் இருந்தது.

வெயிலில் பறவைகள் அலையும், வெயிலில் வண்ணத்துப் பூச்சிகள் அலையும் காட்சி நம் எல்லாருக்கும் சகஜம்தான். ஆனால், நகுலன் சொல்லும் போது ஏற்படும் அமைதியும் விபரீதமும் அலாதியானது. அதற்குப் பிறகு சென்னைக்கு வந்தபிறகு பறக்கும் ரயிலின் கோணத்திலிருந்து கல்லறைத் தோட்டங்களில் விளையாடும் சிறுவர்களை எல்லாம் 'வெயிலில் அலையும் பட்டாம்பூச்சிகள்' என்ற காட்சியைத் தவிர்த்துப் பார்க்க முடிந்ததில்லை.

அதே காலகட்டத்தில் நகுலனின் படைப்புலகுக்கு நெருக்கமான உணர்வைத் தரும் நகுலனின் கருப்பு வெள்ளைப் புகைப்படங்களை காஞ்சனை சீனிவாசன் எடுத்திருந்தார். அந்தக் கருப்பு வெள்ளைப் புகைப்படங்களில் ஒன்றில், நகுலனின் 'ஸ்டேஷன்' கவிதையை, தான் நடத்திய 'அகவிழி' பத்திரிகையின் பின் அட்டையில் வெளியிட்டும் இருந்தார்.




படம்: ஆர்.ஆர். சீனிவாசன்

ஸ்டேஷன்

ரயிலை விட்டிறங்கியதும்
ஸ்டேஷனில் யாருமில்லை
அப்பொழுதுதான்
அவன் கவனித்தான்
ரயிலிலும் யாருமில்லை
என்பதை;
"அது ஸ்டேஷன் இல்லை"
என்று நம்புவதிலிருந்து
அவனால் அவனை
விடுவித்துக் கொள்ள
முடியவில்லை
ஏனென்றால்
ஸ்டேஷன் இருந்தது.

இந்தக் கவிதையில் புரியாத வார்த்தை, புரியாத கருத்து என்று ஒன்றுமேயில்லை. ஆனால், இந்தக் கவிதை ஒவ்வொரு முறை படிக்கும்போதும் புரிந்தும் புரியாத ஒரு விந்தையை புதிரை மாயத்தை ஏற்படுத்துவது. மறைந்தும் தோன்றுவதுமான புலியின் வரிகளைப் போன்ற அனுபவத்தை ஏற்படுத்துவது.

நகுலன் சொல்ல வருவது எந்த நிலையத்தை? ரயில் போனபிறகு நிலையம் உண்டா? ரயில் போனபிறகு அது நிலையமா?

நகுலனது உலகத்தில் சாவு ஒன்றில்லை. 'காதலுக்குப் பின்னர் தொழிலின் இறுதியில் உலகைவிட்டுப் பிரிகையில் சாவுக்கு அப்பால் முதலுக்கும் முடிவுக்கும் முன்னும் பின்னும் முழுவதுமாகப் பின்னிப் பிணைந்து நில்லாமல் நின்று இல்லாமல் இருந்து தெரியாமல் தெரிந்து சொல்லாமல் சொல்லி எல்லாரும் நினைப்பதுவாய் யாவரையும் கடந்ததாக புலனுக்குப் புரியாததாக பொருளுக்குச் சிக்காததாக என்றுமே கேளவியாக எஞ்சி நிற்பது அது அதுவேயாக' (எழுத்து, 1962) தொடக்கத்திலிருந்து நகுலன் சாவை வேறுவேறு வகைகளில் பரிசீலிக்கிறார்.

'வண்ணத்துப் பூச்சிகள்' கவிதையில் நவீனன் இறக்கும் போது படைப்பு வழியாக நாம் அறிந்த நண்பர்கள் கேசவ மாதவன், சிவன், உண்ணூனிப் பிள்ளை யாரும் ஊரில் இல்லை. நவீனனுக்கு உற்ற நண்பர்கள் நமக்குத் தெரியாதவர்களும் இந்தக் கவிதையில் இருக்கிறார்கள். அவர்கள் நவீனனின் விருப்பப்படி அவனைத் தலைகீழாக அடக்கம் செய்துவிட்டனர்.

யாரைத் தலைகீழாக அடக்கம் செய்வார்கள்! தற்கொலை செய்தவர்களையும் பெரும் படுகொலை நிகழ்த்தியவர்களையும்தான் அக்காலகட்டத்தில் தலைகீழாகப் புதைப்பார்களாம்.

நகுலனின் உலகத்தில் கொலைக்கும் தற்சாவுக்கும் பஞ்சமேது. ●

ஷங்கர்ராமசுப்ரமணியன்
**<shankarashankara@gmail.com>**

# சினிமாவில் நிகழ்ந்த ஓர் அற்புதம்!

## ஜெகநாத் நடராஜன்

அறுபது ஆண்டுகளைக் கடக்கும் பிரெஞ்சு திரையுலகின் புதிய அலையில் நிகழ்ந்த ஒரு அற்புதம், 'பிரீத்லெஸ்' திரைப்படம். இதன் கதையை எழுதியவர் பிரெஞ்சின் முக்கிய இயக்குநர்களில் ஒருவரான த்ரூபா. இதன் உருவாக்கத்தில் பெரும் பங்கு வகித்தவர் புகழ்பெற்ற பிரெஞ்சு இயக்குநர் கிளாட் சாப்ரோல். இயக்கியவர், ழூான் லுக் கோடார்ட். அதுவரை *1942*ஆம் ஆண்டு வெளியான 'சிட்டிசன் கேன்' படம்தான் ஒரு இயக்குநர் தான் இயக்கிய முதல் படத்திலேயே புதிய வகை யுக்திகளைக் குவித்த படமாக இருந்தது. *1960*இல் வெளிவந்த 'பிரீத்லெஸ்' கிட்டத்தட்ட அதே யுக்திகளைக் கொண்டிருந்தது. முக்கியமாக எடிட்டிங், கதை சொல்லும் யுக்தி.

"நான் பேசும்போது என்னைப் பற்றிப் பேசுகிறேன். நீ உன்னைப் பற்றிப் பேசுகிறாய். நாம் எப்போது நம்மைப் பற்றிப் பேசப் போகிறோம்" என்று இப்படத்தின் கதாநாயகி, கதாநாயகனிடம் சொல்லும் இடத்திலிருந்து புதிய அலை கிளம்புகிறது என்று சொல்லப்படுவதுண்டு.

இக்கதை மூன்று கட்டங்களாக நிகழ்கிறது

மைக்கேல் போய்க்கார்ட் என்ற இளைஞன் திருட்டு வேலை செய்பவன். அமெரிக்க ராணுவ அதிகாரியின் காரைத் திருடிக்கொண்டு பாரீஸ் வருகிறான். காரில் ஒரு ரிவால்வர் இருக்கிறது. அதை வைத்து விளையாடிக்கொண்டே வேகமாக காரை ஓட்டுகிறான். கார் வேகவேகமாகச் செல்கிறது. காரில் சக்கரம் இருப்பது நகர்வதற்கு, நிற்பதற்கு அல்ல என்று சொல்லிக்கொண்டே போக்குவரத்து விதிகளை மீறுகிறான். அதிக வேகம் காரணமாக போலீஸ் அவனை துரத்த, ஒரு இடத்தில் காரோடு ஒளிகிறான். அங்கு அவனை தேடிக்கொண்டு போலீஸ் வர, சுட்டுக் கொல்கிறான்.

பாரிஸ் வரும் அவன் வழக்கமாக சந்திக்கும் தோழியை சந்தித்துப் பணம் கேட்கிறான். அவள், இல்லை என்று சொல்ல, அவள் பர்சிலிருக்கும் பணத்தை திருடிக்கொண்டு, பட்ரீஷியா என்ற பெண்ணை சந்திக்கிறான். அவள் அமெரிக்க மாணவி, பத்திரிகை நிருபர். ஓய்வு நேரத்தில் சாலையில் 'இண்டர்நேஷனல் ஹரால்ட் ட்ரைப்யூன்' பத்திரிகை விற்கிறாள். அவர்கள் இருவரும் தொடர்ந்து பேசுகிறார்கள். அவன் அவளை தன்னோடு ரோமுக்கு வரும்படி அழைக்கிறான். அவனும் அவளும் சந்தித்து சில நாட்கள்தான் ஆயிற்று. அவர்கள் உடலுறவு கொண்டிருக்கிறார்கள். அவன் எந்தப் பெண்ணையும்விட அவளில் மிக திருப்தியுற்றதாகச் சொல்கிறான். அவளுக்கு அவனைப் பிடித்திருக்கிறது.



எனினும் அவள் மழுப்பலான பதிலைச் சொல்கிறாள். ஆனாலும் அவன் அவளை நம்புகிறான். பேருட்டி என்ற நபரை சந்தித்து அவன் பணம் கேட்கிறான். அவன் பாரீசை விட்டு கிளம்பிவிட எத்தனிக்கும்போது போலீசை சுட்டுக் கொன்றது மைக்கேல் போய்க்கார்ட் என்று பத்திரிகையில் அவனைப் பற்றிய செய்தி வந்திருக்கிறது.

பட்ரீஷியா, தான் தங்கியிருக்கும் ஹோட்டலுக்குப் போகிறாள். அங்கு மைக்கேல் அவளுக்காக காத்துக் கொண்டிருக்கிறான். *23* நிமிடங்கள் அந்த சின்ன ஹோட்டல் அறையில் இருவரும் பேசிக் கொண்டிருக்கிறார்கள். விதவிதமான கோணங்களில், படத்தொகுப்பு யுக்திகளில் அந்தக் காட்சி படம் பிடிக்கப்பட்டிருக்கிறது. இருவரும் இரு விதமான கருத்து உடையவர்கள். அவன் அவள் உடழகில் கவரப்பட்டிருக்கிறான். அவளோடு உறவுகொள்ள விரும்புகிறான். அவள் கர்ப்பமாக இருக்கிறாள். அவளுக்கு அவனைப் பிடித்திருக்கிறது. ஆனால், அவன் அவள் விரும்பும் விதத்தில் இல்லை. அவர்கள் வில்லியம் பாக்னரின் மரணம் பற்றிய கருத்தைப் பேசுகிறார்கள். இல்லாமல் போவதால் வரப்போகும் துக்கத்தைவிட இல்லாமல்போவதே நல்லது என்று அவள் சொல்கிறாள். அவன் இல்லாமல் போவதே தனக்குப் பிடித்திருக்கிறது என்கிறான். அவர்கள் உறவுகொள்கிறார்கள். காலையில் அவன் பணம் வாங்கவும், அவள் தன் பத்திரிகையின் சார்பாக ஒரு நேர்காணலுக்கும் செல்கிறார்கள்.

பட்ரீஷியா புகழ்பெற்ற நாவலாசிரியரான புர்வல்ஸ்கோவை நேர்காணல் செய்கிறாள். அந்தப் பாத்திரத்தில் பிரான்சில் புகழ்பெற்ற இயக்குநர் மெல்வில் நடித்திருக்கிறார். கோடார்ட் வாழ்வு, உறவு முறைகள், ஆண்கள், பெண்கள் பற்றிய தன் கருத்துக்களை அவர் மூலம் பேசுகிறார். "ஆண்களுக்கு பெண்கள் வேண்டும்; பெண்களுக்கு பணம்தான் வேண்டும்" என்று ஒரு கேள்விக்குப் பதில் சொல்கிறார். பட்ரீஷ்யா அவரது வாழ்வின் லட்சியம் என்ன என்று கேட்கிறாள். முரண்பட்டு மரணமடைவது என்று அவர் பதில் சொல்கிறார்.

அதன்பின் காட்சிகள் மிகுந்த வேகம் பெறுகின்றன. பட்ரீஷியாவை சந்திக்கும் போலீஸ் மைக்கேல் ஒரு தேடப்படும் குற்றவாளி என்கின்றனர். பட்ரீஷியா மைக்கேலைக் காப்பாற்ற விரும்புகிறாள். தன்னை பின் தொடரும் போலீசிடமிருந்து தப்பித்து இருவரும் காரை திருடிக்கொண்டு விரைகின்றனர். செய்தித்தாளைப் பார்க்கும் பட்ரீஷியா மைக்கேல் திருமணமானவன் என்று செய்தி வந்திருப்பதை சந்தோஷமாக அவனிடம் கேட்கிறாள். "அவள் என்னை ஏமாற்றினாளா, நான் அவளை ஏமாற்றினேனா



ஞாபகமில்லை" என்று அவனும் உற்சாகமாகப் பதில் சொல்கிறான்.

அவர்கள் பேருட்டியை பணத்திற்காகப் பார்க்கிறார்கள். போலீஸ் அவர்களை நெருங்குகிறார்கள். அந்தப் பயணம் முழுவதும் தான் அவனைக் காதலிக்கிறேனா என்று பட்ரீஷியா யோசித்துக்கொண்டே இருக்கிறாள். இருவருக்கும் நீண்ட வாக்குவாதம் நடக்கிறது. அவன் சந்தித்த பெண்கள் போல் தான் இல்லை என்கிறாள். "நான் உன்னைக் காதலிக்கிறேன்; நீ காதலிக்கிறாயா" என்று அவன் கேட்கிறான். "காதலிக்கிறேன்; ஆனால், நான் நினைத்தது போல நீ இல்லை" என்று அவனிடம் சொல்கிறாள்.

பட்ரீஷியா, அவனைப் பற்றிய தகவலை போலீசில் சொல்கிறாள். போலீஸ் மைக்கேலைப் பிடிக்க நெருங்க, அவன் ஓடுகிறான். பேருட்டியிடமிருந்து பணம் அவனுக்கு கிடைக்க, போலீஸ் வருகிறது. போலீசை சுட்டுவிட்டு தப்பிக்க பேருட்டி ரிவால்வரைக் கொடுக்க, மைக்கேல் சுட மறுத்து தப்பிச்செல்ல முயலும் போது, போலீசால் சுடப்படுகிறான். சாகக் கிடக்கும் மைக்கேலை நோக்கி பட்ரீஷியா ஓடிவருகிறாள்.



கோடார்ட்



த்ருபோ

அவன் புன்னகைக்கிறான். இறக்கிறான். அவள் திரும்பிக்கொள்ள படம் முடிகிறது.

இந்தப் படம் அதிர்வலைகளை ஏற்படுத்த முக்கிய காரணம் அமெரிக்க - பிரெஞ்சு கலாச்சார முரண்பாடுகளை ட்ரூபா வகைமைப் படுத்தியிருந்ததுதான். "அமெரிக்க பெண்கள், ஆண்கள் மீது படுக்கையில் ஆதிக்கம் செலுத்த விரும்புவார்கள். அமெரிக்கர்கள் எத்தனை பேரையும் காதலிப்பார்கள். அமெரிக்க பெண்களுக்கு லிப்ஸ்டிக் போடவே தெரியாது" என்று சரமாரியான வசனங்கள் படத்திலிருக்கிறது.

மைக்கேல் செத்துக் கிடப்பதைப் பார்க்கும் பட்ரீஷ்யா தன் உதட்டைத் தடவிப் பார்த்துக்கொள்கிறாள். அது எதோ மூன்றாம் நபர் சம்பந்தப்பட்ட விஷயம் போல திரும்பிச் செல்கிறாள். அவளுக்கு ஏற்கனவே ஒருவனோடு பழக்கம் இருப்பது காண்பிக்கப்பட்டிருக்கிறது. அவன் காதலில் தோல்வியுற்றவன். அவனுக்கும் அவன் காதலிக்கும் இருந்த பிரச்சினை, அவன், அவளை உறவுக்கு அழைத்ததுதான்.

"காதலிப்பவளை அப்படி அழைத்தது தப்பா" என்று அவளிடம் அவன் கேட்கிறான். அவள் காதலனால் கர்ப்பமானவள். அவள் அமைதியாக இருக்கிறாள். அவன், அவளை முத்தமிடுகிறான். அவள் எதிர்ப்புக் காட்டாமல் அதனை ஏற்றுக்கொள்கிறாள். தான் காதலிப்பவன் ஒரு கொலை செய்த திருடன், இரண்டு பெயர்களில் வாழ்பவன், திருமணமானவன் என்பதெல்லாம்கூட அவளுக்கு பிரச்சினை இல்லை. தான் உண்மையாக அவனைக் காதலிக்கிறோமா என்பதே அவள் பிரச்சினை. இல்லை என்று சொல்லும் விதமாக அவன் நடந்துகொள்கிறான். யாருக்காகவும் எதையும் மாற்றிக்கொள்ளாதவன் அவன். தன்னால் துன்பப்படும் எவர் பற்றியும் கவலைப்படாதவன்.

அறுபது ஆண்டுகளுக்கு முன் கோடார்ட் காண்பித்த சுதந்திர மனம் அவன். அதனாலேயே எல்லோருக்கும் ஒரு ஈர்ப்பு அப்படத்திலிருந்தது.

*1940, 1950*களில் ஸ்டுடியோக்களின் ஆதிக்கத்திலிருந்த பிரெஞ்சு சினிமா, அமெரிக்க பி-கிரேட் கேங்ஸ்டர் சினிமாவை எடுக்கச்சொல்லி கட்டாயப்படுத்திக் கொண்டிருந்தபோது, "ஒரு பெண், ஒரு ஆண், ஒரு துப்பாக்கி போதும்; எனக்கு ஒரு கேங்ஸ்டர் படம் எடுக்க" என்ற கோடார்டின் பிரகடனத்துடன் இந்தப் படம் வெளியானது. கட்டுப்பாடற்ற இந்தப் புதிய அலை வீச்சை பலரும் தொடர்ந்து நவீன பிரெஞ்சு சினிமாவை உருவாக்கினார்கள். Francois Truffaut, Eric Rohmer, Claude Chabrol, Jacques Rivette - Alain Resnais, Louis Malle, Jean-Pierre Melville, Agnes Varda, Jacques Demy Alain Resnais, Melville என்று இந்த வகை இயக்குநர்களின் வரிசை தொடர்ந்தது.

"இரண்டு வருடங்கள் இந்தப் படத்தைப் பற்றி திருப்தியற்று இருந்தேன். அதன் பின்னர்தான் இந்தப் படத்தை Alice In The Wonderland´டன் வைத்தேன்" என்று




கோடார்ட் ஒரு இடத்தில் சொல்கிறார்.

நகர நெரிசலில் படப்பிடிப்பு முதன் முதலாக நடந்தது. படத்தில் படப்பிடிப்பை பலர் வேடிக்கை பார்ப்பது பதிவாகியிருந்தது. கோடார்ட் காலையில் படப்பிடிப்புக்கு முன்பாக அதன் வசனங்களை எழுதினார். இரண்டு பேர் நீண்ட நேரம் தொடர்ந்து கோபமாக காதலுடன் பேசும் காட்சி மற்றவர் வேடிக்கை பார்க்கும் வண்ணம் அமைந்தது.

நவீன பிரெஞ்சு சினிமாவின் புதிய அலை இயக்குநர்கள் படத்தில் சின்னஞ்சிறு வேடங்களில் நடித்திருந்தார்கள். செய்தித்தாளில் மைக்கேலின் புகைப்படத்தைப் பார்த்து அதை போலீசிடம் காண்பிக்கும் நபராக கோடார்ட்டே நடித்திருந்தார்.

திரைப்படத்தில் அதற்கு முந்திய காலகட்டங்களின் இருந்த, பிம்பங்கள் நகர்தலின் தடையை பாத்திரங்களிடையே விலக்கியவர் என்ற பெருமை கோடார்டுக்கு உண்டு. பேச்சுகளின் திசைமாறல், நகர்தலில் கோணங்கள் மாறல், முன் கதை, பின் கதை இணைப்பு என்ற வகைகளில் புதிய பிரெஞ்சு சினிமாவாக அது இருந்தது. கேங்ஸ்டர் படங்களில் உள்ள விதிகள் அனைத்தையும் இப்படம் மீறியிருந்தது. டாகுமெண்டரிப் படம் போல ஒரு புனைக்கதை. நிஜக் கதை போன்று ஒரு புனைக் கதை. கதைக்குள் இயங்கும் பிரென்சு மனம், அமரிக்க மனம். அங்கு முகிழ்க்கும் காதல். தான் குறாவாளியானாலும் காதலியை விட்டுச்செல்ல அவன் விரும்பவில்லை. கேங்ஸ்டர் படங்களில் காதல் கதை. தங்களை மீறாத பாத்திரப் படைப்புகள் என்று பார்வையாளர்களை ஆரவாரம் செய்ய வைத்தது.

கைகளால் தூக்கி இயக்கப்பட்ட கேமரா, நகரும் கார்களின் வேகத்திற்கு இணையாக பயணிக்கும் கேமரா, சாத்தியமில்லாத இடங்களில் ஆச்சர்யப்படுத்தும் கோணங்கள், அதிர்ச்சிக்குள்ளாக்கும் படத்தொகுப்பு. காதலை கனவுகளைக் குழைத்து கனவுக் காட்சிகளோடு கதை சொல்லிக் கொண்டிருந்த காலகட்டத்தில், கூட்ட நெரிசலில், பூட்டிய சிறு அறையில். போலீஸ் துரத்தும்போது தப்பித்தலில், போலீஸில் பிடிபடப் போகிறோம் என்ற அச்சுறுத்தலின் போது கோடார்ட் காண்பித்து இயல்பான வாழ்வின் ஒரு சாட்சியாக்கினார்,

யாருக்கும் அஞ்சாத, சாவைப் பற்றி கவலைப்படாத, புத்தி சாதுர்யம் மிக்க மைக்கேலின் பாத்திரப் படைப்பு. அவன் ஹாலிவுட் நடிகர் ஹம்ளிபோகார்ட் நடித்த படங்களை, முக்கியமாக The Harder They Fall படத்தை தனக்கு உதாரணமாகக் கொள்கிறான். ஆனால், இந்தப் படம் Pacino, Beatty, Nicholson, Penn அனைவராலும் வேறுவேறு கதைகளாகக் கொண்டாடப்பட்டது. அதைப் போன்ற பாத்திரப் படைப்புகளில் இன்றுவரை படங்கள் வந்து கொண்டுதான் இருக்கின்றன. ●

**ஜெகநாத் நடராஜன்** <jaganathanvr4@gmail.com>



# லக்ஷ்மி மணிவண்ணன் கவிதைகள்

**ஓவியம்: நடேஷ்**

1
அதோ என் சித்தப்பா
இப்போது விலகிச் சென்று விட்டார்
நீயும் விலகு
இன்னும் இடைவெளி தேவை

அதோ என் மாமா
இன்னும் விலகு
இடைவெளி தேவை

அப்பா இல்லை என்பது போலவே
போய்க்கொண்டிருக்கிறாரே
அவர் தான் அப்பா

ஓ

அவள் என் மனைவி
அவன் என் கணவன்
அவர்கள் என் குழந்தைகள்
விலகு எனக்கும் உனக்குமே
இப்போது
இடைவெளி தேவை

எனக்கு யாருமே இல்லை அண்ணா
விலகு
இப்போது
உனக்கும் உனக்குமே
இடைவெளி
தேவை

2
தாலத்தை எடுத்து
வையுங்கள் அம்மா
பசிக்கிறது

தாலத்தில் சோறினை போடுங்கள் அம்மா
பசிக்கிறது

பிறக்கும் முன்பிருந்தே
பசிக்கும்
பசி

3
ஹெல்மெற்றுக்குள்
இருக்கும் நண்பனுக்கு
பல சௌகரியங்கள்
முகம் தெரியாது என நினைத்துக்
கடந்துவிடலாம்

இந்த சனியனா வருகிறான் என ஒதுங்கி
விரைந்து விடலாம்
தெரியவா போகிறது
தெரிந்தால் தெரியட்டுமே
காறியுமிழ்ந்து
கடக்கலாம்
என்ன வேண்டுமானாலும் செய்யலாம்

ஹெல்மற்றுக்குள் நண்பனின் தலை
வேறொன்றாக இருக்கிறது
நாம் பொதுவாக அறியாத
வேறொரு தலை அது

எல்லா வசதியும் இருந்தும்
நெளிந்து வளைந்து இறங்கி
நான்தான் என்று ஹெல்மற்றை இறக்கி
நின்று கொண்டிருக்கிறான் பாருங்கள்
ஒரு நண்பன்
அவன்முகத்தில் அவனிங்கே
பிழைக்க வந்ததன் ரேகையே
இல்லை

4
ஒவ்வொரு பெண்ணும்
ஒவ்வொரு விதமான லௌகீகம்
சிறந்த பெண் சிறந்த லௌகீகம்
கடினமான பெண் கடினமான லௌகீகம்



அவளுடைய விலங்கு
அவளுடைய புன்சிரியில் இல்லை
அழகில் இல்லை
இடைவளைவில் இல்லை
மார்பிலும் இல்லை

காட்டிலிருந்து வேட்டைக்கு புறப்பட்ட
முதல் நாளில்
இருக்கிறது
அது.

எவ்வளவு தூரம் பின்னர்
பழக்கப்பட்டிருக்கிறது
என்பதில் இருக்கிறது
காட்டிற்கு உன்னை எப்படி பழக்கப்போகிறது
என்பதில்
இருக்கிறது

சிலசமயம் காட்டிலிருந்து எவ்வாறு உன்னை
மீட்டெடுக்கிறது
என்பதிலும் இருக்கிறது

5
பூனை போல
பசு போல
நாய் போல நரி போல
குதிரை போல
அணில் போல
கரடி போல
வாயைச் சுழற்றுகையில்
சர்ப்பம் போல

மிருகமாக பார்க்கத் தொடங்கினால்
மனிதர்கள்
மிகவும்
சுவாரஸ்யமாக
தெரிகிறார்கள்

6
ராணிக்கு இரண்டு
விஷப்பற்கள் உண்டு
உன்னிடம் அவள் அதனை நீட்டாதவரையில்
நண்பன்
நீட்டிவிட்டாளெனில்
காதலன்

7
இன்னும் யானையை அதே
அதிசயத்தோடு
பார்க்க முடிகிறது
ரயிலுக்கு டாட்டா காட்டும்
பழக்கம்
நிற்கவில்லை

புட்டான்களைப் பிடிக்க
கைகள் நீளுகின்றன
கருடனைத் தொட்டு
கண்களில் போட்டுக் கொள்கிறேன்

கொடிமரத்தில்
சாஷ்டாங்கமாக விழுவது கண்டு
அமர்ந்திருக்கும் பெருமாள்
எழுந்து நின்று
பார்க்கிறார்

திரையில் மழை பெய்தால்
சிகிரெட் பற்றத்
தோன்றுகிறது

என்றாலும்
தாடி இவ்வளவு
நரைத்திற்றே
ஏகச்சி ஏகம்பனே

8
நண்பனை அழைத்துக் கொண்டு
கடற்கரைக்குச் சென்றேன்
அவன்தன் நண்பனை உணர்ந்து
நடந்து வருகிறான்

மனைவியை அழைத்துச் சென்றேன்
அவள்
காதலனை நான்போல நினைத்து
உடன் வருகிறாள்

குழந்தைகளோ
அப்பாவின்
கரம்பற்றிக் கொள்கிறார்கள்

கடலின் கரம்பற்றி நடக்கிறேன்
அப்போது
எனக்கும் பெயரில்லை
கடலுக்கும்
பெயரில்லை

9
எப்போது
நானாக மட்டும்
இருக்கிறேனோ
அப்போது
மீதமெல்லாம்



கரைந்து
விலகிச் செல்கிறது

எப்போது எல்லாம்
விலகிச் செல்கிறதோ
அப்போதெல்லாம்
சிவம் உடலைத்
தழுவிக் கொள்கிறது

10
மூன்று தெப்பக்குளங்கள்
எனக்கு சொந்தம்

இரண்டு கடல்கள்
எனக்கு
உண்டு

மலைகள் நான்கைந்து
அம்மா என்னிடம் விட்டுச் சென்ற
பௌர்ணமி
ஒன்றுண்டு என்னிடம்

இதையெல்லாம் யாரிடமேனும்
விட்டுச் செல்வதற்காக
வைத்திருக்கிறேன்

உங்களுக்கு என்ன உண்டு?
தெளிவாக
எனக்குச் சொல்லுங்கள்
விட்டுச் செல்வதற்காக
என்ன வைத்திருக்கிறீர்கள்? ●

**லஷ்மி மணிவண்ணன்**
<slatepublications@gmail.com>



# பூமா ஈஸ்வரமூர்த்தி கவிதைகள்

I

ஒரு பெரிய விடுமுறை நாளில்
அணிந்துகொள்ள சட்டை ஒன்றை
தேர்ந்தெடுத்தேன்
அலமாரியை திறந்து மூடும் போதெல்லாம்
நானதை தவறாமல் பார்க்கிறேன்

II

நீ யார்
நானா நான்தான்
இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்
காவல் காத்துக் கொண்டிருக்கிறேன்
இந்தக் கதவை
கதவின் உள்ளே யார் இருக்கிறார்கள்
உள்ளே நிறைய பேர்கள் இருக்கிறார்கள்
அவர்களெல்லாம் யார்
அவர்களெல்லம் நான்தான்
கதவடியில் உன் வேலைதான் என்ன
வெளியேறுபவர்களையும்
உள் நுழைபவர்களையும் கண்காணிக்கிறேன்
யார்யார் உள்ளே நுழைவார்கள்
அவர்களும் நான்தான்
யார்யார் வெளியேறுவார்கள்
அவர்களும் நான்தான்
பிறகெதற்கு கண்காணிப்பு

வருவதும் போவதும் கண்காணிப்பதும்
நீதானே

III

ஐயமில்லை உண்மைதான்
ஒழுங்கிலும் ஒழுங்கற்றும் காற்றில் மிதக்கும்
வான் பறவைகள்
ஒரு கூட்டு நடனம்
அங்கங்கே பூக்கள் பூத்து காற்றில் அசையும்
ஒரு கூட்டு நடனம்
தட்டான்களும் வண்ணத்துபூச்சிகளும்
தோட்டத்தில் நிறையும்
ஒரு கூட்டு நடனம்

ஒத்திகை மண்டபம் எங்கிருக்கிறது? ●

பூமா ஈஸ்வரமூர்த்தி
<seathu1952@gmail.com>

# லிங்கம்: ஆன்மீகமா ஆயுதமா

*மாலதி மைத்ரி*

**ஓவியம்:** Hanna Barczyk

இரண்டாண்டுகளுக்கு முன், 'சதை முதலீடும் உலக ஆயுதச் சந்தையும்' கட்டுரைத் தரவுகளுக்காக, அமைப்பாக்கப்பட்ட பாலியல் தொழிற்சங்கப் பிரதிநிதிகளின் நேர்காணல்களைத் தேடும்போது, ஜப்பான் கவாசகியில் கொண்டாடப்படும் 'ஆண்குறித் திருவிழா' ஆவணப்படம் காண நேர்ந்தது. நவீன முதலாளித்துவ ஆட்சிக் கோலோட்சும் முதலுலக நாடுகளில் ஒன்றான ஜப்பானில், இன்றும் நிலப்பிரபுத்துவக் கலாச்சாரத்தின் எச்சமான 'ஆண் பாலுறுப்பு வழிபாடு' தொடர்வது வியப்பையளித்தது.

ஆண்-பெண் பாலுறுப்புகளை வழிபடும் கலாச்சாரத்தை உடையக் கீழைத்தேயத் தேசங்களின் சமய நம்பிக்கையை தமிழ்ச் சமூகங்கள் பல நூற்றாண்டுகளாய் தங்கள் வாழ்வியல் வழிபாட்டு முறையாக்கிக் கொண்டுள்ளன. இந்தியா, நேபாளம், கம்போடியா, இலங்கை, இந்தோனேசியா, தாய்லாந்து, பாலி போன்ற நாடுகளில் ஆண்-பெண் உடலுறவு பிரதிமையான ஆவுடைலிங்கம் ஆயிரமாண்டுகளாக வழிப்பாட்டுத் தளங்களிலும் வீட்டின் பூசை மாடங்களிலும் சிலையாக, படமாக வைத்து வணங்கப்படுகிறது.



பூட்டான், ஜப்பான் உள்ளிட்ட நாடுகளில் நேரடியான ஆண் பாலுறுப்பை குலச்சின்னக் குறியீடாக, வெற்றியின் அடையாளமாய் வழிபடுகிறார்கள், கொண்டாடுகிறார்கள். பண்டையக் கிரேக்க முடியாட்சிக் காலத்தில் ஆண் தலைமைத்துவத்தைக் கொண்டாடிய வழிபட்ட புராதன 'ஆண்குறி திருவிழாவின்' நவீன வடிவமிவை.

பூட்டானில், விதைப்பையுடன் கூடிய விந்துப் பீச்சியடிக்கும் ஆண் பாலுறுப்பு வளமையின் குறியீடு, காவல் தெய்வத்தின் குறியீடு என்னும் கதை இதன் பின்புலமாக கொள்ளப்படுகிறது. பதினைந்தாம் நூற்றாண்டில் நேரடியான ஆண் பாலுறுப்பு வழிபாட்டை த்ருக்பா குன்லே புத்தப் பிக்கு?! (இத்துறவி 5000 பெண்களைப் புணர்ந்தவன் என்ற கதை வழக்கிலிருக்கிறது. 8000 பெண்களைப் புணர்ந்தவன் என்ற சிவனின் சிவப்புராணக் கதையும் இங்கே ஒன்றாக இணைகிறது) உருவாக்கியதாக வரலாறு சொல்கிறது. பூட்டான் மக்கள் தங்கள் வீட்டின் சுவர்களில் ஆண் பாலுறுப்புப் படங்களைத் தீட்டி அலங்கரிப்பது தீமைகளிலிருந்துக் குடும்பத்தைக் காப்பதாக நம்பப்படுகிறது (தற்போது நகரங்களில் இவ்வழக்கம் நடைமுறையிலில்லை). நாடு முழுதும் மர, உலோகச் சிற்பங்களாய், நினைவுப் பரிசு பொருட்களாய், கழுத்து டாலர்களாய், கையடக்கச் சாவிக்கொத்துகளாய் ஆண் பாலுறுப்புகள் கிடைக்கின்றன பூட்டானில். நம் நாட்டில் சிவ வழிப்பாட்டாளர்கள் கழுத்திலணியும் உருத்திராட்சக் கொட்டை ஆண் விதைப்பையின் குறியீடாக இருக்கலாம். சிவனின் கண்கள் அல்லது கண்ணீர் துளிகள் உருத்திராட்சமென்ற சிவப்புராணக் கதை பொருந்தவில்லை. சிவனின் மூன்றாவது கண்ணின் பதிலியாய் நெற்றியில் திலகமணியும் வழக்கமிருக்கிறது.

பதினேழாம் நூற்றாண்டு 'எடொ' காலத்திலிருந்து ஆண் பாலுறுப்பு வழிபாடு ஜப்பான், கவாசகியில் 'கனமரா மட்சுரி', கோமகியில் 'ஹோனென் மட்சுரி' எனக் கொண்டாடப்படுகிறது. ஆண்டுக்கு ஒருமுறை வசந்தம் தொடங்கும் போதும், அறுவடை கொண்டாட்டமாகவும் ஆண்குறி திருவிழாவை நடத்துகிறார்கள் இவ்விரு பிரதேசங்களிலும். பிரமாண்ட ஆண் பாலுறுப்பு சிலையை ஊர்வலம் எடுத்தல், வேண்டுதலாக ஆண்குறியை காய்கறியில் செதுக்கி, மாவுகளில் உருவாக்கி காணிக்கையாகச் செலுத்துதல் போன்றவை இத்திருவிழாவின் பிரதான நிகழ்வுகள். திருவிழா சந்தையில் உணவுப்பொருட்கள், இனிப்புப் பண்டங்கள், பலூன்கள், சிற்பங்கள், பென்சில் ஸ்டான்டுகள், கீசெயின்கள், தொப்பிகள், விளையாட்டு சாமான்கள், நினைவுப்பரிசுப் பொருட்கள் அனைத்தும் ஆண் பாலுறுப்பு வடிவத்தில் விற்கப்படுகின்றன. ஜப்பானில் ஆண் பாலுறுப்பு வளமையின், தீமையை ஒழிக்கும், இல்லற மகிழ்ச்சியின் குறியீடாய் வணங்கப்படுவதாக கதையுள்ளது. இவ்விரு நாடுகளின் வழமைகளிலிருந்து சிறிது மாறுபட்டு நம் நாட்டில் 365 நாளும் வீதிக்கு வீதி பொதுவெளியில் நின்று ஜிப்பைத் திறந்து மூத்திரத்தைப் பீச்சியடித்து ஆண்குறித் திருவிழாவைக் கொண்டாடி மகிழ்கிறார்கள்.

இந்தியாவில் வணங்கப்படும் ஆவுடைலிங்கம் ஆண்-பெண் புணர்ச்சி குறியீட்டின், உயிர்களின் தோற்றத்தைப் போற்றும் வழிபாடாய் ஆய்வாளர்கள் ஒரு கருகோளையும், சைவச் சமயம் சிவலிங்க வழிப்பாட்டுக்கானச் சிவப்புராணக் கதைகளின் வழி



வேறொரு கதையையும், இந்துமதம் கட்டமைத்தாலும் தாந்திரிக, சாக்தேய வழிபாட்டு மரபின் சக்தியின் குறியீடான யோனி அடையாளம் புறந்தள்ளப்பட்டு, மறைக்கப்பட்டு ஆண் மைய்ய சமய வழிபாட்டை முன்னெடுக்க, ஆவுடைலிங்கம் என்ற அடையாளம் வழக்கொழிக்கப்பட்டது. சிவலிங்கமாக, ஆண் மைய்ய சமயமாக, ஆண்மைய்யப் பெருந்தெய்வ வழிபாட்டுமுறையாக, ஆண் மைய்யச் சமய அரசியல் ஆயிரமாண்டுகளுக்கு முன்பே பேரரசுகளின் தோற்றத்தோடு பேரரசுகளின் அங்கீகாரத்துடன் நிறுவனமயமாக்கப் பட்டிருக்கிறது.

பெண் தெய்வ வழிபாட்டுமுறை நடைமுறையில் இருக்கும் கோயில்கள் பெண்நிலையை அங்கீகரித்து, உரிமையளித்து கொண்டாட இடமளித்திருப்பதால், மதத்திலும் பக்தியிலும் வழிபாட்டிலும் பெண்களுக்கு சமத்துவம் பேணப்படுவதாக மாயை உருவாக்கப்பட்டிருக்கிறது. நிறுவனமயப்பட்ட இந்துமதப் தெய்வ வழிபாட்டுமுறைக்குள் முரண்படும் பெண்ணிருப்பை மட்டுப்படுத்தப் பெண்களின் பக்தி நுகர்வு வணிகத்தை ஆண்கள் கையகப்படுத்த மேற்கொண்ட உத்தியவை. மேல்மருவத்தூர் ஆதிபராசக்தி கோயில் வழிபாட்டுமுறை பெண்களை முன்னிறுத்திச் செய்வதாக இருந்தாலும், ஆண் நிறுவனப்படுத்தப்பட்ட இந்துமதத்தின் தொங்குசதையாக பெண்கள் அங்கு ஆட்டுவிக்கப்படுகிறார்கள். ஆயிரமாயிரம் பெண் தெய்வங்களை உருவாக்கி வைத்திருக்கும் இந்தியச் சமூகம் பெண்ணை சக மனிதராக சக உயிரியாக தனது அடிப்படையாக ஏற்றதில்லை.

தொல்குடி மனித சமூகத்தில் தோன்றிய வழிபாட்டு முறைகளை மூன்று வகைப்படுத்தலாம். 1. இயற்கையை வழிபடுதல், 2. தீமைகள், அழிவிலிருந்து காத்தவற்றை வழிபடுதல் மற்றும் இயற்கை உற்பத்திக்கும் மறுஉற்பத்திக்கும் உதவும் அனைத்தையும் வழிபடுதல். 3. தீமையை, அழிவை உருவாக்கியவற்றை வழிபடுதல்.

**இயற்கையை வழிபடுதல்:** உலகம் இயங்கவும் ஜீவராசிகளின் தோற்றத்துக்கும் வளர்ச்சிக்கும் மூல காரணியான பஞ்ச பூதங்களையும் இயற்கையையும் மனிதக்குலத்துக்கு நன்மையளிக்கும் விலங்குகளையும் தாவரங்களையும் வணங்குதல், நன்றி செலுத்துதல்.

**தீமைகள், அழிவிலிருந்து காத்தவற்றை வழிபடுதல் மற்றும் இயற்கை உற்பத்திக்கும் மறுஉறுப்பத்திக்கும் உதவும் அனைத்தையும் வழிபடுதல்:** இயற்கை-செயற்கைப் பேரிடர் அழிவிலிருந்துக் காத்த இயற்கை வளங்களை, மனிதர்களை, உயிரினங்களை வணங்குதல் மற்றும் நோய், பகைவர்களிடமிருந்துக் காத்த மனிதர்கள், உயிரினங்களையும் வணங்குதல், நன்றி செலுத்துதல் (நடுகல் வழிபாடு இவற்றுள் அடங்கும்).

**தீமையை, அழிவை உருவாக்கியவற்றை வழிபடுதல்:** பாம்புக் கடித்து அதிக உயிரிழப்புகளை சந்தித்த தொல்குடிச் சமூகம் பாம்பைக் கண்டு பேரச்சம் கொண்டனர் (பாம்பை நேரடியாக பார்த்திராத சூழலில் பிறந்தவர்கள் கூட பாம்பின் வரைபடத்தை, புகைப்படத்தைக் கண்டு அஞ்சுவது குறித்து பாம்பைப் பற்றிய உயிரச்சம் மனிதகுலத்தின் அடிப்படை உள்ளுணர்வாய் மரபணுவில் பதிவாகி யிருப்பதன் வெளிப்பாடாய் அறிவியலாளர்கள் விளக்கியிருக்கிறார்கள்). உயிரச்சத்தை உருவாக்கும் பாம்பை வழிபட்டால் பாம்பைச் சாந்தப்படுத்தி விசப் பாம்புகளிடமிருந்துத் தப்ப முடியுமென்ற நம்பிக்கையின் அடிப்படையில் பாம்பை வணங்கும் வழக்கம் தோன்றியது (மதுரைவீரனை தங்கள் தலைவனாக, காவல் தெய்வமாக, குலதெய்வமாக ஒடுக்கப்பட்ட சமூகத்தினர் வழிபடும் மரபும், மதுரைவீரனைக் கொன்ற ஆதிக்கச் சமூகத்தினர்

மதுரைவீரனின் சாபத்திலிருந்தும் கோபத்திலிருந்தும் தங்கள் குலத்தை, சந்ததியைக் காத்துக்கொள்ள, மதுரைவீரனைச் சாந்தப்படுத்தக் குலதெய்வமாக வழிபடும் முரண்பட்ட மரபும் இங்கு ஒப்பிட்டுப் பார்க்கத்தக்கன).

வெண்கலக் காலத்தில் தாய்வழிச் சமூகம் வீழ்த்தப்பட்டு தந்தைவழிச் சமூகம் தோற்றம் பெற்றிருக்கக் கூடுமென வரலாற்று ஆய்வாளர்கள் கருதுகிறார்கள். இயற்கை உற்பத்திச் சக்தியை, மறு உற்பத்திச் சக்தியை, ஆண் தலைமைத்துவச் சமூகம், ஆண்களின் நேரடி ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவந்தக் காலகட்டத்தில், சிலைவழிபாடு, உருவ வழிபாடு தோன்றியிருக்கிறது. இக்காலகட்டத்தில்தான் ஒரு ஆவுடைலிங்க சுடுமண் வடிவம், லிங்க வடிவ சின்னங்கள் சில சிந்துசமவெளி அகழ்வாய்வில் கண்டுபிடிக்கப்பட்டதாக ஆதாரம் காட்டுகிறார்கள். இவற்றுடன் நிறையப் பெண் உருவச் சிலைகள் கிடைத்திருக்கின்றன. அவை சிந்துசமவெளி சமூகத்தில் வணங்கப்பட்ட 'வளமைத்தேவதைகள்' உருவங்களாக இருக்கலாமென்று ஆய்வாளர்களின் கருத்து. சிந்து சமவெளி நாகரீகத்தை ஒத்த, அதற்கு பிந்தைய கீழடி அகழ்வாராய்ச்சியில் இதுபோன்ற எவ்வித உருவ வழிபாட்டுச் சின்னங்களும் கிடைக்கவில்லை என்பதும் ஆய்வுக்குரியவை.

கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதப்படும் சித்தூர் குடிமல்லம் பரசுராமேஷ்வரர் கோயிலில் சிவனின் உருவத்துடன் இருக்கும் சிலை ஆண் பாலுறுப்பு வடிவில் நிற்கிறது. குடிமல்லத்திலிருக்கும் ஆண் பாலுறுப்பு வடிவம் இந்தியக் கோவிலிலிருக்கும் மிகப் பழைமையான சிவலிங்கச் சிலை.

மதுராவில் கந்தரவர் வழிபடும் புடைப்பு மரச்சிற்பத்தில் ஆண் பாலுறுப்பு வடிவம் செதுக்கப்பட்டிருக்கிறது. இதன் காலம் கி.பி. முதலாம் நூற்றாண்டு என்று வரையறுத்திருக்கிறார்கள். வட இந்தியாவில் குசானர்கள் வழிபடும் காட்சியாய் கற்பாறையில் செதுக்கிய புடைப்புச் சிற்பத்தில் மேடைமேல் நிற்கும் ஆண்குறி வடிவம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டை சார்ந்தது. பிற்காலச் சோழர் காலத்துத் தாராசுரம் கோயிலில் சிவனின் உருவத்தை உள்ளடக்கிச் செதுக்கப்பட்ட புடைப்புச் சிற்ப லிங்கங்கள் ஆவுடை நீக்கிய ஆண்குறி வடிவங்களே.

ஆண் பாலுறுப்பு வடிவத்தை நேரடியாக வழிபடும் முறை இந்தியத் துணைக் கண்டத்திலிருந்ததை வரலாற்று ஆதாரங்கள் சுட்டுகின்றன. சமண சமயத் தீர்த்தங்கரர், திகம்பரர்கள், சைவச் சமய அகோரிகளின் அம்மணக் கோலம் 'அதிகாரத் துறப்பு-பற்றுத் துறப்பு' சமய ஆன்மீகக் குறியீடாக முன்வைக்கப்பட்டாலும், ஆணின் முற்றதிகாரத்தை வலியுறுத்தும் ஆண் மேலாதிக்கப் பேரரசியலின் சமூகக் குறியீடு ஆண் நிர்வாணம்.

சமண, பௌத்தச் சமயத்தை வீழ்த்திய பின் இந்தியத் துணைக்கண்டத்தை ஆண்ட மன்னர்கள், சைவச் சமயத்தை மக்கள் மதமாக மாற்ற முன்னெடுத்த சமய அரசியலில், சிவனின் ஆண் பாலுறுப்பு பிரதிமையை பொது வழிபாட்டுச் சிலையாக நிறுத்தி வழிபடத் தகாது என்பதால், மனிதக்குல தோற்றத்தின் கலை வடிவமாய் நிற்கும் ஆவுடைலிங்கம், சைவச் சமயத்தைப் பின்பற்றத் தொடங்கிய பேரரசர்களின் வழி சைவச் சமய எழுச்சிக்காக மீண்டும் உருவாக்கப்பட்டிருக்கலாம். இந்தியா உள்ளிட்ட கீழைதேய நாடுகளில் வழிபடப்படும் ஆவுடைலிங்கங்கள் அனைத்தும் கி.பி. ஏழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் உருவாக்கப்பட்டவையாகவே கிடைக்கின்றன. கீழைத்தேய நாடுகளில் பெண்ணினத்தை வெற்றி கொண்டதன் குறியீட்டு வழிபாடாக ஆண்கள் லிங்கத்தை வழிபடுகிறார்கள். லிங்கத்தின் கோபத்துக்கு ஆளாகிவிடாமல் ஆண் மேலாதிக்கத்தின் அதிகாரக் குறியீடாய் நிற்கும் லிங்கத்தைச் சாந்தப்படுத்த, தங்கள் அடிமைத்தனத்தை ஒப்புக்கொடுக்கப் பெண்களும் வழிபடும் முறைத் தோன்றியிருக்கலாம்.

இரு இனக்குழுக்களுக்கிடையிலான, இரு சிற்றரசுகளுக்கு இடையிலான, இரு பேரரசுகளுக்கு இடையிலான போர்கள், உலக நாடுகளுக்கு இடையிலான உலகப் போர்கள், காலனியாதிக்கப் போர்கள், விடுதலைப் போர்கள், இரு மதங்களுக்கிடையிலான யுத்தங்கள், இரு சாதிகளுக்கிடையிலான சண்டைகள் அனைத்திலும் ஆதிக்கத்தை எதிர்க்கும் மக்களை அல்லது தோற்கும் தரப்பைச் சார்ந்தவர்களை ஒடுக்க, அடிமையாக்க அங்கிருக்கும் பெண்கள் மீது ஆண்குறியை ஆயுதமாக உபயோகிக்கிறார்கள்.

சைவத்திருமறைகள் பாடிய நாயன்மார்கள், மாற்று மதப் பெண்களை 'கற்பழிக்க' அருள்வாய் திருவுளமே என்று சிவனை நோக்கிப் பாடும் மதப் பயங்கரவாதத்தை, நாம், சைவ மதம் அமைதி மார்க்கத்தைப் போதிப்பதாக பக்தியைப் போதிப்பதாகப் பொய் பரப்பிக் கொண்டிருக்கிறோம். இந்தியா-பாகிஸ்தான் பிரிவினையின் போது ஆயிரமாயிரம் பெண்கள் ஆண்குறி ஆயுதத்தால் தாக்கப்பட்டார்கள். சுதந்திர இந்தியாவில் காஷ்மீர் மற்றும் வடகிழக்கு மாநிலங்களில் இன்றும் தங்கள் இனவிடுதலைக்குப் போராடும் சிறுபான்மையினப் பெண்களை இந்திய வல்லரசுப் படைகள் ஆண்குறி ஆயுதங்களால் வேட்டையாடுகிறார்கள். குஜராத் கலவரத்தில் இஸ்லாமியப் பெண்களை வன்புணர்ந்து சிதைத்தார்கள் இந்துத்துவா குண்டர்கள். தமிழகத்தில் வீரப்பன் தேடுதல் வேட்டையில் வாச்சாத்தியில் பழங்குடியினப் பெண்கள் மீது சீருடைக் காவலர்களால் நிகழ்த்தப்பட்ட பாலியல் தாக்குதல் திராவிட அரசியலின் அவமானம். ஈழவிடுதலைப் போரில் சிங்கள ராணுவமும் இலங்கையில் இறங்கிய இந்திய ஐபிகேஎப் ராணுவப்படையும் ஈழத் தமிழ்ப் பெண்களை நிர்மூலமாக்க ஆண்குறியாயுத்தையும் பயன்படுத்தினார்கள்.

இந்தியாவை ஆளும் இந்துத்துவா பாசிச அரசால் கொண்டுவரப்பட்ட குடியுரிமைத் திருத்தச் சட்டத்தை (NRC, CAA) எதிர்த்துப் போராடிய வடகிழக்கு தில்லி பகுதி இஸ்லாமியர்கள் மீது தாக்குதல் நடத்தி 50க்கும் மேற்பட்ட உயிர்களை பறித்தச் சங்கிக் குண்டர் படை, வீட்டுக்குள் அத்துமீறி நுழைந்து ஆடையை அவிழ்த்து ஆண்குறியைக் காட்டி அச்சுறுத்தியதாக உண்மையறியும்



குழுவினரிடம் தெரிவித்திருக்கிறார்கள் இஸ்லாமியப் பெண்கள்.

பெண்ணின் நிர்வாணம் அழகியலாய், ரசிக்கத்தக்கதாய், போற்றத்தக்கதாய் வியாபாரமாய் உலகில்நுகரப்பட்டாலும், ஆபாசமென ஒதுக்கினாலும், இங்கு பெண் பாலுறுப்பை ஒட்டுமொத்தச் சமூகத்தையோ தனிநபரையோ அச்சுறுத்தும் ஆயுதமாக எப்போதும் பயன்படுத்த முடியாது.

ஆனால், ஆணின் நிர்வாணம்-அம்மணம் இங்கு அச்சுறுத்தலுக்கான, பெண்கள் மீது வன்முறை செலுத்தும் ஆபத்தான ஆயுதமாக்கப்பட்டிருக்கிறது. இந்திய சமூகத்தில் ஒரு சிறுமி மட்டுமல்ல, ஒரு சிறுவன்கூட ஆணின் நிர்வாணத்தைக் கண்டால் அஞ்சுகிறார்கள். அது, வாழ்நாள் முழுதும் தாங்கள் எதிர்கொண்ட விரும்பத்தகாத அருவெறுக்கத்தக்க நிகழ்வாக மனபதிவாகி துன்புறுத்துகிறது அவர்களை.

மக்கள் தன்னைச் சுற்றி நிகழும் விளைவுகளைப் புரிந்துகொள்ள முடியாத காரணங்களால் அச்சமடைகிறார்கள். இவ்வச்ச உளவியல் மனிதசக்தியை மீறிய புறசக்தி மீதான நம்பிக்கை நோக்கி நகர்த்துகிறது மனிதக்கூட்டத்தை. இவ்வச்சத்தை மூலதனமாக்கி மக்களின் அறியாமையின் மீது கட்டப்பட்ட நிறுவனம் மதம். கடவுள் இங்கு கேள்விக்குட்படுத்த முடியாத லாபம் கொழிக்கும் முதலீட்டு சரக்கு. மத வியாபாரம் குவிக்கும் மூலதனம் வழி கட்டியெழுப்பப்படும் அரசுகள் பின்பு, அரசே கேள்வி கேட்க முடியாத ஒரு மதமாகிறது. கடவுளை, மதத்தைக் கேள்வி கேட்பது அரசத் துரோகம்-தேசத் துரோகம் (ராமனைக் கேள்வி கேட்பவர்கள் மட்டுமல்ல ராமன் பெயர் உச்சரிக்காதவர்களும் இன்று தேசத் துரோகிகளாக்கப்படும் அரசியலை இதன் பின்னணியில் உள்வாங்கிக்கொள்ள முடியும்). எல்லையற்ற அதிகாரமுடையவனாக ஆணை கலாச்சாரம் உருவாக்கி, பின் கடவுளாக உருவகிக்கப்பட்டு, ஆண் பாலினத்தை நிறுவனமயமான மதமாகிவிட்டது ஆணாதிக்க சமூகம். அவன் செயல் அனைத்தும் தெய்வச்செயல்கள் என்றும் ஆணின் பாலியல் வன்முறைச் செயலுக்கு பொறுப்பேற்கத் தண்டிக்கக் கோருவது குடும்பத் துரோகமாக, சமூகத் துரோகமாக, தேசத்துரோகமாக ஆக்கப்பட்டிருக்கிறது.

பெண்கள் அதிகமாகக் கூடும் பொதுவெளிகள், பெண்கள் பள்ளி, கல்லூரி வாசல்களில் தனது ஆணுறுப்பைத் திறந்துகாட்டி தன்னால் அச்சுறுத்த முடியும் என்று இதன்வழி ஒரு ஆண் பலம் பெற்றான். இதற்கான துணிவை மதம், சமூகம், அரசு வழங்குகிறது. ஆணை பெற்று வளர்க்கும் பெண், ஆண்களுடன் இல்லறம் நடத்தும் பெண், ஆவுடைலிங்கத்தை ஆயிரமாண்டுகளாக வழிபடும் பெண், தன்னுடைய இணை ஆண் அல்லாத பிற ஆணின் அம்மணத்தை எதிர்கொண்டால் ஏன் அச்சமடைய வேண்டும்? தன்னை அவமதித்துவிட்டதாய் தன் சுயமரியாதைத் தாக்கப்பட்டதாய் ஏன் உணர்கிறார்கள்? ஆண் குறியைப் பெண்களுக்கு எதிரான ஆயுதமாக உபயோகித்த, உபயோகிக்கும் வரலாற்று அச்சத்தின் உளவியல் தாக்கமிவை.

பாலியல் பலாத்காரக் குற்றவாளியைக் காப்பாற்ற அவனது குடும்பத்தின் பெண்கள், தன் வீட்டு ஆண் நிரபராதி என்றும், பாதிக்கப்பட்ட பெண்ணையே குற்றவாளியாக்குகின்றனர். உற்றார், ஊர், காவல்துறையினர், நீதித்துறையினர், அரசியல்வாதிகள், மடாதிபதிகள் வரை பாதிக்கப்பட்ட பெண்ணைத்தான் குற்றவாளியாக்குகின்றனர். சீருடைத் தரித்த அரசு காவலர்களின், இராணுவத்தினரின் பாலியல் குற்றங்கள் 'தேசபக்தி ஆப்ரேசனாக' பாராட்டப்பட்டு விருதுகளும் பதிவியுயர்வும் அரசால் அளிக்கப்படுகிறது. ரேப்பிஸ்ட் காவலர்களை, இராணுவத்தினரைக் குற்றவாளி என்பவர்கள் தேசத்துரோகிகள்.

தனிநபர் வார்த்தை சண்டையில் பெண்ணைத் தாக்க அல்லது ஒருவனை நிலைகுலையச் செய்ய, பெண்ணை வன்புணரும் வசைச் சொல்லாயுதம் யதார்த்தமாக பிரயோகிக்கப்படுகிறது. மேற்குலக நாடுகளில் 'Fuck You' பொது வசை 'Love You' போல அதிகமாக உச்சரிக்கப்படுகிறது. அதற்கு இணையா இங்கு 'Mother Fucker - ங்கோத்தா' தாய் இழிவு வசையை மகிழ்ச்சி, துக்கம், கோபம், எதிர்ப்பை வெளிப்படுத்த தமிழ் நாக்குகள் உச்சரித்து உச்சமடைகின்றன. தாய்மொழியில் தாயைக் கொன்று புதைத்துவிட்டு பெண் விடுதலை பற்றி பேசுகிறோம். மொழி வெளி முழுதும் பெண்ணை ரேப் செய்து கிடத்தி மகிழும் பெண்ணிழிவு வக்கிர மனநோய் கொரோனா கிருமியைவிட மிக ஆபத்தான, ஒழிக்க முடியாத தொற்றாக பல்கிப் பெருகி பரவிக்கொண்டிருக்கிறது.

பொது சமூகம் மட்டுமல்ல மனிதவுரிமை பேசும், பெண்ணியம் பேசும், புரட்சி பேசும் பெண்களும் எதிர்த்தாக்குதலாகவும் அரசை எதிர்க்கவும் தாய் இழிவு வசையை, பெண்ணிழிவு வசையைப் பயன்படுத்துவது



முள்ளை முள்ளால் எடுப்பது என்கிறார்கள். முள்ளை முள்குத்திய இடத்தில் எடுக்காமல் தாயின் யோனியில் எடுக்கும் வன்முறை புரட்சி அரசியலாகுமா.

பெண்கள் தங்கள் எதிரிகளின் கூடவே ஒரே கூரையின் கீழ் வாழ்கிறார்கள். இதனைப் பெண்களால் அடையாளம் காண முடியாமல் ஆயிரமாயிரமாண்டுகளாகத் திணிக்கப்பட்ட ஆணாதிக்க சார்பு கருத்தியலால், ஆணாதிக்கயேற்பு அடிமை உளவியலால் பெண்களின் மூளைகள் நஞ்சூட்டப்பட்டிருக்கின்றன. ஆண், உன் தகப்பன் உன் சகோதரன் உன் கணவன் உன் மகன் அவன் எப்படி எதிரியாவான் என்று மூளைச்சலவை செய்யப்பட்டிகிறார்கள்.

பெண் உனது தாய் உனது சகோதரி உனது மனைவி உனது மகள்; பெண் உன் எதிரி இல்லையென்றால் ஏன் பெண்ணின் உரிமைகளைப் பறித்து வைத்திருக்கிறாய்; பெண்ணை கொத்தடிமையாய் நடத்துகிறாய். சொந்த தகப்பன், சகோதரன் சொத்தில் பங்குத் தரவில்லை என்றால் ஆண்களுக்குள் வெட்டிக் கொன்று கொள்கிறார்கள். குறைந்தபட்சம் பெண் எப்போதாவது சொத்தில் பங்குத் தராதத் தந்தையை சகோதரனைக் கொன்ற வரலாறு உண்டா. பெண் கண்ணுக்குத் தெரிந்த பொருளாதார உரிமைகளை வன்முறையாக மட்டுமில்லை, சட்ட வழியாகக்கூட மீட்க முடியாத பாசவுணர்வுக்குக் கட்டுப்பட்ட உழைப்பு, உணர்வுச் சுரண்டலுக்குள் சிக்க வைக்கப்பட்டிருக்கிறாள். பிறகெங்கு அவள் கண்ணுக்குத் தெரியாத அதிகார உரிமைகளைக் கேள்வி எழுப்ப முடியும் போராடிப் பெற முடியும். எதிரிகளைப் பெற்று ஊட்டி (பாம்புக்கு பால் வார்க்கும் தெய்வ நம்பிக்கை போல) வளர்க்கும் நிறுவனமயப்படுத்தப்பட்ட கொத்தடிமைகளாகத் தொடர்கிறது பெண்களின் வாழ்வு.

குடும்பத்திற்குள் பெண் கண்ணிவெடிகள் சூழ வாழ்கிறாள். பொதுவெளிக்கு வந்தால் நாலாபுறமும் தாக்கும் 'வார் சோனாக' இருக்கிறது. யுத்தக்காலத்தில் சொல்லப்படும் 'நோ பயர் ஜோன்கள்' போல் 'சேப் ஜோன்கள்' இவ்வுலகின் பெண்களுக்கு பாதுகாப்பளிக்குமிடமாக குடும்பத்திற்குள்ளுமில்லை என்பது பெண்குலத்துக்கெதிரான அதி பேரரச்சுறுத்தலாக எழுந்திருக்கிறது. ஆண்மைய்ய, ஆணாதிக்கச் சமூகத்தில் ஆண்களால் உருவாக்கப்பட்ட மதங்கள் அனைத்தும் பெண்களுக்கு எதிரானவையே. அதிலும் ஆணாதிக்க முற்றதிகாரக் குறியீடாய், ஆண் மைய சமயத்தின் குறியீடாய், பெண் ஒடுக்குமுறையின் குறியீட்டின் நேரடியான அர்த்தமுடைய சிவலிங்கத்தை வழிபடும் முறை, பெண் இருத்தலுக்கு எதிரான வழிபாட்டு முறை.

ஆணாதிக்கத்தை வழிபடத்தக்கதாய் வணங்கத் தக்கதாய் உருவாக்கிய அடிமை உளவியலிருந்து வெளியேற வேண்டியிருக்கிறது. ஆண் குறியை உலக முழுதும் பெண்களை அச்சுறுத்தும் உயிராயுதமாக்கி, பெண்களை அழித்தொழிக்கும் 'பால் போர்' 'பனிப் போர்' யுத்த அரசியலை வீழ்த்தும் நடவடிக்கையை மொழியிலிருந்து தொடங்க வேண்டுமா? மதத்திலிருந்துத் தொடங்க வேண்டுமா? அரசியலிருந்து தொடங்க வேண்டுமா? சமூகத்திலிருந்துத் தொடங்க வேண்டுமா? கருப்பையிலிருந்துத் தொடங்க வேண்டுமா? ●

மாலதி மைத்ரி

<anangufeministpublication@gmail.com>

தொலைப்பேசி நாட்கள்-2

# பென்னிஸ்

**விட்டல்ராவ்**



ஸ்கூட்டர் இருசக்கர வாகனங்கள் சாலையில் ஓடத்தொடங்கின. ஆரம்பகாலத்தில் தென்பட்ட அந்த வாகனாதி 'ஃபண்டாபுலஸ்' வகை வண்டியொன்றில் வந்து இறங்கிய பென்னிஸை சிலர் வயிற்றெரிச்சலோடு கவனித்தனர்.

“வண்டிக்காரன், இதுவும் வாங்குவான், இன்னொண்ணும் வாங்குவான்” என்று மெதுவாக கூறிவிட்டு பீடியை எறிந்தான் நாயர்.

“யோவ் நாயர், உள்ளே போ, ஏஇ கூப்புடறார். டைவர்ஷன் ஷெட்யூல் வந்திருக்கு, பாத்து ஓவர் டைம் கேளு”, என்றான் சக வயர்மன் மைகேல். வயர்மன் நாராயண நாயர் உள்ளே போனதும் இருவர் பென்னியை நெருங்கி விசாரித்தனர்.

பென்னிஸ் கவர்ச்சிகரமாயிருப்பான்; மங்களூர் பக்கத்துக்காரன்; வீட்டில் கொங்கணி பேசுவான். தொலைப்பேசி இலாகாவுக்குள் கடை நிலை ஊழியனாக வலது காலை எடுத்து வைத்து நுழையும்போது பைஜாமா சட்டையிலிருந்தவன், இப்போது 'ஃபண்டாபுலஸ்' ஸ்கூட்டரில் வந்து

## கண்ணிமைக்கும் முன் பாலன் ஓங்கிப் பளாரென்று பென்னிஸை அறைந்தார். தொடர்ந்து இன்னும் சிலரும் அவனைத் தாக்கினர்.

இறங்கினான். சரியாக வேலை தெரியாது. எப்படியோ காசு சேர்ந்திருந்தது. டிபார்ட்மெண்டில் அதிகாரி உத்தியோகம் பார்ப்பதாக ஊரில் கதைவிட்டு படிப்பறிவில்லாத பணக்கார வீட்டில் பெண் எடுத்து, காசு பணம் கொண்டு வந்துவிட்டான். அதை வட்டிக்கு விட்டபடியே வளர்ந்தவன்.

சென்னை குதிரைப் பந்தய நாட்களில், தொலைப்பேசி இலாகா மகாஜனங்களில் கீழ்மட்டத்திலிருந்து மேல்மட்டத்து சிப்பந்திகள் வரை ரேஸ்கோர்சில் காணக் கிடைப்பார்கள். பெண்கள், விதிவிலக்கல்ல. குறிப்பாக ஆங்கிலோந்திய பெண்கள் குதிரைப் பந்தயங்களைத் தவறவிடமாட்டார்கள். பிரதி மாதம் பதினைந்து தேதிக்குப் பிறகு இந்த வாடிக்கையாளர்களுக்குப் பணத்தட்டுப்பாடு வரும். முடிந்தவரை அடகு வைப்பார்கள், கைமாற்று வாங்குவார்கள். சற்று பெரிய தொகையை வட்டிக்கு கடன் வாங்கும் சமயம்தான் பென்னிஸ் அவதாரமானான்.

உயர் அதிகாரிகள் அவனிடம் நேரிடையாக கடன் கேட்காமல் கீழ்மட்ட சிப்பந்தி ஒருவன் மூலமாக செய்துகொள்ளுவார்கள். அப்படியாக சில கீழ்மட்ட சிப்பந்திகளை உயர் அதிகாரிகள் தம் ஜேபியில் போட்டுக்கொண்டு தொழிற்சங்க நடவடிக்கைகள் மற்றும் அலுவலக, தொலைப்பேசி இணைப்பகப் பகுதிகள், சாப்பாட்டறை ஆகியவற்றில் ஊழியர்கள் பேசிக்கொள்ளுவதை அறிய ஐந்தாம்படையாக உபயோகிப்பார்கள். ரகசிய சலுகைகள் கிடைக்கும். பென்னிஸ் அந்த கீழ்மட்ட சிப்பந்திகளை வாஞ்சையோடு கவனித்துக்கொள்ளுவதுண்டு. பென்னிஸ் மெள்ள நான்காம் பிரிவிலிருந்து மூன்றாம் பிரிவு சிப்பந்திகளுக்கான போட்டித் தேர்வில் தேர்ச்சி பெற்று, நான்காம் ஊழியனுக்கான காக்கிசீருடையைக் களைந்து விசிறியெறிந்தான்.



இப்போது பெருந்தொகையை வட்டிக்கு தருகையில் எதையாவது ஈடாக வாங்கிக்கொள்ளத் தொடங்கினான். அப்படியாகத்தான் வாங்கிய பெருந்தொகைக் கடனை சொன்ன தேதிக்குத் திருப்பித் தர இயலாத அதிகாரி ஒருவர் கடனுக்கு ஈடாக தன் ஸ்கூட்டரை பென்னிஸிடம் விட்டுவிட்டார். இந்த விதமாக வந்ததுதான் அவன் சவாரி செய்து கொண்டிருந்த 'ஃபண்டாபுலஸ்'.

ஷேக்ஸ்பியரின் ஷைலக்குகள் காலந்தோறும் உலகின் ஏழைநாடுகளில் தோன்றிக் கொண்டேதான் இருக்கிறார்கள். இவர்களைப் பற்றி பேசாமலிருக்க முடிவதில்லை.

பின்னாளில் பென்னிஸ் கடன் தருவதை குறைத்துக்கொள்ள முயன்றான். நூறு ரூபாய் கடன் கேட்டால், அந்த தொகைக்கான முதல் மாத வட்டியைக் கழித்துக் கொண்டு மீதியைத் தருவதோடு, வேறொரு வழியையும் கையாளுவான். வட்டி போக மீதியை நீட்டிவிட்டு தோழமையோடு அழைப்பான்.

"வா, டீக்குப் போலாம்."

பரவாயில்லை, வட்டிக்காரன் தேநீருக்கு அழைக்கிறான், ஈரமுள்ளவன்தான் என நினைத்துக் கொண்டே கடன் வாங்கியவன் அவன் பின்னால் போவான். தேநீருக்கு சொல்லச் சொல்லுவான் பென்னிஸ். வழக்கம் போல பரிசாரகன் விதவிதமான பிஸ்கட்டுகள் அடுக்கின தட்டை கொண்டுவந்து வைப்பான். உடனே ஒன்றிரண்டை எடுத்துக் கடித்தபடியே தன் வாடிக்கையாளனைப் பாசத்தோடு கேட்பான்.

"பிஸ்கட்."

வாடிக்கையாளன் சந்தோஷத்தோடு இரண்டை எடுத்து ருசிப்பதற்குள் தேநீர் வந்து விடும். பென்னிஸ் எவ்வளவு சூட்டையும் தாங்குவான். பொறுக்க முடியாத சூடானால் கைக்குட்டையை மடித்து குவளையைப் பிடித்துக்கொண்டு வேகமாகக் குடித்து முடிப்பான். இராஜாஜி, பொறுக்க முடியாத நிலையில் கொதிக்கக் கொதிக்கத்தான் காபி குடிப்பார் என்றும், டர்க்கி டவலை எட்டாய் மடித்து தம்ளரைப் பிடித்துக்கொண்டு குடிப்பார் என்றும் சொல்லக் கேள்வி.

வாடிக்கையாளன் சூட்டுக்குத் திணறிக்கொண்டிருக்கையில், பென்னிஸ், "வெளியில நிக்கிறேன்", என்று கூறிவிட்டு வெளியில் போய் சிகிரெட் புகைத்துக் கொண்டிருப்பான். சர்வர் வந்து பிஸ்கட்டுகளை எண்ணிப் பார்த்துவாடிக்கையாளனிடம் பில்லை வைத்துவிட்டுப் போவான். வாங்கிய கடனில் கடன்காரனுக்கும் சேர்த்து தேநீர் - பிஸ்கட் செலவையும் ஏற்றுக்கொண்டு விதியை நொந்துகொள்ளுவான் வாடிக்கை.

பென்னிஸ் தன் கடனாளியிடம் கடனை வசூலிக்க மேலும் ஒரு சில வழிமுறைகளில் இறங்கினான். இவனிடம் கடன் வாங்குபவர்கள், தொலைப்பேசி ஊழியர் கடன் பெறும் கூட்டுறவு சொசைட்டியில் உறுப்பினர்களாக இருப்பார்கள். அவர்களை சொசைட்டியில் தற்காலிக கடனைப் போட்டு வாங்கச் சொல்லி, கடன் கிடைக்கும் நாளன்று அப்பணத்தைப் பெற்றுக்கொள்ளும் அனுமதிக்கான 'ஆதரைசேஷன்' படிவத்தை தன் பெயருக்கு எழுதி வாங்கி, பணத்தை வாங்கிக்கொள்ளுவான்.

இந்த சமயத்தில் அவனிடம் கடன் வாங்கியவர்களில் பட்டாபி ஒருவன். அவன் திடீரென மஞ்சள் காமாலையில்



இறந்துபோனான். மனைவி - ஒரு பெண் குழந்தை. வழக்கம்போல டெலிபோன் எக்ஸ்சேஞ்சிலிருந்து முப்பது நாற்பது பேர் மூன்று பிரிவினராக இலாகா வான்களில் ஏறிக்கொண்டார்கள். இறந்தவருக்கு மாலை, ஊதுபத்தி, பன்னீர் புட்டிகள் வாங்குவதற்கு சிலர் எல்லா ஊழியர்களிடமும் பணம் வசூலித்து அந்த காரியத்தில் இறங்கினார்கள். சாவு என்றாலே அதற்கொரு சிறப்பு 'மூட்' தேவைப்படும் சிலருக்கு. அவர்கள் சத்தமில்லாமல் ஒதுக்குப்புறமாயிருந்த குடிசைக்குள் நுழைந்து வாயைத் துடைத்துக்கொண்டே கண் சிவக்க முகம் மினுமினுக்கும்படி வெளியில் வந்தார்கள். சற்று அருவருப்போடுதான் வானில் அவர்களுக்கு வழிவிட்டார்கள்.

அங்குபோனதும்தான் தெரிந்தது இவர்களுக் கெல்லாம் முன்னால் முந்திக்கொண்டு பென்னிஸ் வந்திருந்தான். யூனியன் தலைவர் பாலன் சில யூனியன் முக்கியஸ்தர்களோடு வந்து விட்டிருந்தார். பென்னிஸ் யூனியனில் தீண்டத்தகாதவன். அவன் இப்போது இறந்துபோனவனின் மனைவியைத் தனியாக அழைத்துச்சென்று குசுகுசுவென்று பேசிக்கொண்டிருந்தான். யூனியன் தலைவர் பாலன் அங்கு வரவே மூடிக்கொண்டு தள்ளிப்போய் நின்றான். அவளை சமாதானப்படுத்திவிட்டு, அவளுக்கு இறந்துபோன கணவன் மூலமாய் வரவேண்டிய பணத்தைப் பற்றி விவரம் சொல்லிவிட்டு, ஆறு மாதத்துக்குள் 'கம்பேஷனேட்' வழியில் இலாகாவுக்குள் ஒரு வேலையும் வாங்கிவிடலாமென்றும் உறுதியளித்துவிட்டு பாலன் சொன்னார்: "யார் கேட்டாலும், எந்த பணப் பட்டுவாடாவுக்கும் அவங்க பேருக்கெல்லாம் 'ஆதரைஷேன்' தந்து, உனக்குப் பதிலா பணம் வாங்கிடச் சொல்லாதே. உன் புருஷனுக்கு வர வேண்டிய ஒவ்வொரு பணத்தையும் நீயே நேரில் போயி வாங்கிடு. தேவைப்பட்டா எனக்கு போன் பண்ணு. இல்லேனா, யூனியனுக்கு போன் பண்ணு, யார் வேணுமானாலும் துணைக்குக்கூட வந்து வீடு வரை வருவாங்க" என்றார்.

தொடர்ந்து, "என்ன சொல்லிகினே வர்றேன். என்னமோ மாதிரி தலையாட்டாரையே?"

அவள் திணறித் தடுமாறினாள். பிறகு சுதாரித்துக்கொண்டு பேசினாள்.

"பி.எஃப். பணத்த வாங்கிக்க. வாங்கி எனக்குத் தரவேண்டியத தீத்திடுன்னாருங்க. ஆனா, இப்ப ஒடனடியா ஒங்க வெல்ஃபேர்ல சாவு எடுக்கறதுக்கு ஆயிரம் ரூபா தருவாங்களாமே, அத வாங்கிறதுக்கு தன் பேருக்கு ஆதரைஷேன் எழுதி வாங்கிக்கிட்டாரு" என்று கூறி பென்னிஸைக் காட்டினாள் இறந்துபோன பட்டாபியின் மனைவி.

இறந்தவரின் இறுதிச் சடங்கு, மயானச் செலவுக்கென ஊழியர் நல்வாழ்வு நிதியிலிருந்து ஒரு தொகையை முன் பணமாவும், பிறகு கொஞ்சத்தையும் தருவது வழக்கம். பாலன் பென்னிஸை அணுகி விசாரித்தார்.

"ஐயாயிர ரூபா பாக்கி நிக்கிது; வட்டிய சேத்தாம சொல்றேன்," என்றான்.

"அத அப்புறம் பாத்துக்கெலாம். இது சாவுச் செலவுக்கான வெல்ஃபேர் அட்வான்ஸ். இதில கை வைக்காத. ஆதரைசேஷேனை எங்கிட்ட குடு. இல்லேனா, எங்க முன்னாலயே கிழிச்சிப் போடு", என்றார்.

பட்டாபிக்கு பாடை தயாராகி விட்டது. சக ஊழியர்களே தூக்கிச் செல்லுவதாக தீர்மானமானது.

"ஆகாது. அதை நாந்தான் வாங்கிக்குவேன். ஆதரைசேஷன் தரமுடியாது," என்றான் பென்னிஸ்.

கண்ணிமைக்கும் முன் பாலன் ஓங்கிப் பளாரென்று பென்னிஸை அறைந்தார். தொடர்ந்து இன்னும் சிலரும் அவனைத் தாக்கினர்.

"வுடுங்க்" என்றான் பென்னிஸ். ஜேபியிலிருந்து 'ஆதரைசேஷன்' படிவத்தை வெளியில் எடுத்து சுக்கு நூறாக் கிழித்துப் போட்டுவிட்டு, "மன்னிச்சிருங்க்," என கரங்கூப்பினான். பட்டாபியைத் தூக்கும்போது, ஓடிப்போய் ஒரு கைத் தாங்கல் கொடுத்துகூடச் சென்றான் பென்னிஸ்.

வேனில் வந்த மூவர் 'மூட்' ஏறின நிலையில் திடிர் நடனம் போட்டபடி முன்னால் சென்றனர்.

(வளரும்)

# புறமாகவும் அகப்புறமாகவும்

## கருணாகரனின் இரண்டு கவிதைத் தொகுதிகள்

*அ. ராமசாமி*

எழுபத்து மூன்று கவிதைகளோடு ஒரு தொகுதியும் 88 கவிதைகளோடு இன்னொரு தொகுதியுமாக இரண்டு தொகுப்புகளோடு இந்த ஆண்டு வெளிப்பட்டுள்ளார் கவி.கருணாகரன். இலங்கையின் கிளிநொச்சியில் வசிக்கும் கருணாகரனின் முதன்மையான அடையாளம் கவி. தனது முதன்மையான புனைவாக்க வெளிப்பாடாகக் கவிதையை மட்டுமே நினைக்கும் கருணாகரன், அளவில் அதிகமாக வெளிப்படுவது கட்டுரைகளில். எப்போதும் நிகழ்வுகளை நேரடியாக முன்வைத்து எழுதும் பத்திக் கட்டுரை வழியாக இலங்கைத் தமிழர்களின் அரசியல் மனசாட்சியாகத் தன்னை வெளிப்படுத்திக் கொண்டே இருப்பவர். தொடர்வாசிப்பும் நேர்ப்பழக்கமும் இல்லாத ஒருவர் அவருடைய மொத்த எழுத்துகளையும் இப்போது வாசித்தபின் அவரை ஓர் அரசியல் எழுத்துக்காரர் என்றே அடையாளப்படுத்த முடியும். இரண்டு கவிதைத் தொகுப்புகளின் வெளியீடும் 2020, சென்னை புத்தகச் சந்தையை ஒட்டி அமைந்திருந்தது. அவை தமிழ்நாட்டுப் பதிப்பகங்கள் வழியாகவே அச்சாகியுள்ளன. புறக்கவிதைகளின் தொகுதியாக அடையாளப்பட்டுள்ள 'நினைவின் இறுதிநாள்' தொகுதியை 'புது எழுத்து' பதிப்பகம் வெளியிட்டுள்ளது. அகப்புறக் கவிதைகளின் அடையாளங்களோடு தொகுக்கப்பட்டுள்ள 'உலகின் முதல் ரகசியம்' தொகுதியைப் 'புலம்' பதிப்பகம் வெளியிட்டுள்ளது.



இனவாத இலங்கையின் அரசியலுக்குள் செயல்படும் ஒருவர் வெளிப்படையாக ஓர் இயக்கத்தை ஆதரித்து எழுதுவதின் மூலம் உருவாக்கிக்கொண்ட அரசியல் அடையாளத்தைக் கருணாகரனின் பிரதிகளுக்குள் தேடினால் கிடைக்காமல் போகலாம். அதற்குப் பதிலாக அரசியல் நிலைப்பாடுகள் இல்லாமல், வாழ்க்கையை நகர்த்திக் கொண்டிருந்த சாதாரணமனிதர்களின் அல்லாட்டத்தைக் கவனித்து, அதனைப் போக்கும் அரசியலின் தேவையைத் தொடர்ந்து வலியுறுத்தும் அரசியலை அவரது உரைநடைப் பிரதிகள் முன்வைத்துக்கொண்டே இருந்தன; இருக்கின்றன. இக்கவிதைப் பிரதிகளுக்குள்ளும், தன்னையும் தனது சூழலையும் எழுதி வெளிப்படுத்திக் கொள்ளும் நிலைபாட்டைத் தொடர்ச்சியாக மேற்கொண்டிருப்பவர் என்பது வெளிப்பட்டுள்ளது. ஈரோஸ் அமைப்பின் 'பொதுமை', விடுதலைப்புலிகளின் 'வெளிச்சம்' ஆகியவற்றின் ஆசிரியத்துவத்தில் இருந்து போராட்டங்களையும், போர்க்காலத்தையும் கவனித்தவர். போர்க்காலம் தந்த பெரும் நெருக்கடியிலும் முள்ளிவாய்க்கால் பேரழிவுக்குப் பின்னர் கிடைத்திருக்கக் கூடிய வாய்ப்புகளிலும் புலம்பெயர்ந்துவிட வேண்டும் என்ற எண்ணத்தைப் புறமொதுக்கிவிட்டு நாட்டைவிட்டுக் கிளம்பாமல் நாட்டுக்குள்ளேயே வாழ நேர்ந்துள்ளதின் அனுபவச்சேகரமாக அவரது எழுத்துகளை வாசிக்கமுடியும். கட்டுரைகளில் வெளிப்படும் இந்தத் தன்னிலையைக் கொஞ்சமும் குறையாமல் கவிதை சொல்லியின் தன்னிலையாகவும் ஆக்கியிருப்பதை இந்த இரண்டு தொகுதிகளிலும் வாசிக்க முடிகிறது. இவ்விரு கவிதைத் தொகுப்புக்கு முன்பே 1. ஒரு பொழுதுக்குக் காத்திருத்தல் 2. ஒரு பயணியின் நிகழ்காலக் குறிப்புகள் 3. பலியாடு 4. எதுவுமல்ல எதுவும் 5. ஒரு பயணியின் போர்க்காலக் குறிப்புகள் 6. நெருப்பின் உதிரம் 7. படுவான் கரைக்குறிப்புகள் 8. இரத்தமாகிய இரவும் பகலுமுடைய நாள் என எட்டுக்கவிதைத் தொகுதிகளை வெளியிட்டுள்ள கருணாகரன் வேட்டைத்தோப்பு என்ற சிறுகதைத் தொகுதியையும் இப்படி ஒரு காலம், அன்பின் திசைகள் என இரண்டு பத்தி எழுத்துகளின் தொகுதியையும் வெளியிட்டுள்ளார் என்பது கூடுதல் தகவல்கள்.



## அகநிலை உருவாக்கமும் புறநிலை உருவாக்கமும்

கவிதை வடிவம் முதன்மையாகக் கவிதைக்குள் சொல்லியின் தன்னிலையை உருவாக்குகிறது. அதற்கான மொழிக்கூறுகள் உறுதியான பின்னர் கேட்கும் முன்னிலையை அல்லது பிறநிலையை உருவாக்கும் முயற்சியில் இறங்குகிறது. இவ்விரண்டு நிலைகளையும் இணைப்பதாக இருப்பதுவே சொல்லப்படும் சங்கதிகள். இத்தொடர்பாடலில் தெளிவான முறைமையைக் கைக்கொள்ளும் கவிகளே பெருங்கவிகளாகநிலைபெறுகின்றனர். கருணாகரனின் நினைவின் இறுதி நாள் (புது எழுத்து, டிசம்பர் 2019) உலகின் முதல் ரகசியம் (புலம் வெளியீடு, 2019) என்ற இரண்டு தொகுதிகளையும் ஒருசேர வாசிக்கும் நிலையில் இரண்டு தொகுப்புக்கும் அடிப்படையான வேறுபாடொன்றை உணர முடிக்கின்றது. பொதுவாகக் கவிதை வடிவம் தனியொரு தன்னிலையின் உணர்வு என்பதை நாம் அறிவோம். உணர்வு வெளிப்பாடுகள், நேர்நிலையில்- அகநிலையில் ஒருவிதமாகவும், மறைநிலையில்-புறநிலையில் இன்னொருவிதமாகவும் இருப்பது தவிர்க்கமுடியாதது. இவ்வேறுபாட்டை உருவாக்குவதில் சொல்பவருக்கும் கேட்பவருக்குமிடையே உள்ள தூரம் முக்கிய வினையாற்றுகின்றது.

நேர்நிலை வெளிப்பாட்டைக் கொண்டிருக்கும் நவீனத்துவ உள்முகக்கவிதைகள் உள்பட்ட காமமும் காதலும் சார்ந்த அகக்கவிதைகளில் - கேட்பவரின் அருகிருப்பு காரணமாக நெருக்கமும் ரகசியங்களும் பரிமாறிக்கொள்ளப்படும் வாய்ப்புகளுண்டு. சொல்பவர் தனது சொற்களோடு உடல் மொழியையும் பயன்படுத்தும் நிலை இருப்பதால் எல்லாவகையான

மெய்ப்பாடுகளின் மிகைத்தன்மையையும் காட்டி அருகிருப்பவரைத் தம்மோடு இணைத்துக்கொள்ளும் முயற்சிகள் அதன் முதன்மையான கூறு. அகக் கவிதைகளுக்கான நெருக்கமான உறவுகளாகச் செவ்வியல் கவிதை வரையறுத்துச் சொன்ன கதாமாந்தர்கள் பத்து. அப்பத்துக் கதாமாந்தர்கள் வழியாக உருவாகும் வாழ்க்கை குடும்ப வாழ்க்கையே. ஆக அகக்கவிதை அல்லது நேர்நிலைக் கவிதைகள் தனக்குள்ளும் தன்னைச் சுற்றியிருக்கும் குடும்ப உறுப்பினர்களோடும் கொள்ளும் உறவை முன்வைப்பன எனக் கொள்ளலாம். நிகழ்காலத்தில் இந்த நெருக்கம் நட்பு, பணியிடம் என நகர்ந்தும் உள்ளது. அதற்கு மாறாகப் புறநிலை அல்லது மறைநிலைக்கவிதைகள் கேட்பவரின் அடையாளமின்மை அல்லது தூரம் காரணமாகப் பொதுநிலைப்பட்ட பேச்சுகளையே முன்வைக்கின்றன. பொதுநிலைப்பட்ட பேச்சுகள் எப்போதும் ஒருவரை நோக்கியனவாக இல்லாமல் பலரையும் உள்ளடக்கியனவாக இருக்கின்றன. சொல்பவர் ஒருவராக இருக்க, கேட்குமிடத்தில் பலரும் இருக்கிறார்கள் என்பதால், அவர்களை நம்பச்செய்ய வேண்டும் என்னும் நோக்கத்தில் "நடந்தவை இவை, நேரில் கண்டவை, எங்கள் சந்திப்பு இது, சந்திப்பின்போது இருந்தவர்கள் இவர்கள், அது நடந்தஇடத்தை மட்டுமல்ல,காலத்தைக்கூட என்னால் சொல்ல முடியும்" என்றெல்லாம் ஆதாரங்களை முன்வைத்துப் பேசும் தன்மையில் இருக்கின்றன புறநிலைக்கவிதைகள். இதன் தொடக்கத்தைப் புறநானூற்றுக் கவிதைகளிலும் தொடர்ச்சியை அறக்கவிதைகளிலும் வாசித்துள்ளோம்.

இந்த அடிப்படையிலேயே இப்போது வந்திருக்கும் கருணாகரனின் இரண்டு தொகுதிகளில்- நினைவின் இறுதிநாள் தொகுப்பைப் புறநிலைக் கவிதைகளின் தொகுதி என்றும், உலகின் முதல் ரகசியம் தொகுப்பை அகமும் புறமும் கலந்த தொகுதி என்று வகைப்படுத்திப் பேச முடியும் என்று நினைக்கிறேன். நினைவின் இறுதிநாள் தொகுப்பிற்குள் இருக்கும் நினைவுகள் பெரும்பாலும் ஈழத்தில் நடந்த போர் பற்றி நினைவுகளாகவே இருக்கின்றன. அந்த நினைவுகளுக்குள் நபர்கள் இருக்கிறார்கள்; நிகழ்வுகள் இருக்கின்றன; வலிகள் இருக்கின்றன; சாவுகள் இருக்கின்றன; கொலைகள் இருக்கின்றன; துரோகங்கள் இருக்கின்றன; தியாகங்கள் இருக்கின்றன. அழித்தொழிப்புகளும் பேரழிவுகளும் பதிவாகியிருக்கின்றன. இவற்றிற்கெல்லாம் காரணமானவர்களும் அடையாளப் படுத்தப்பட்டிருக்கிறார்கள். அத்தொகுப்பின் முதல் கவிதை,

> *அறுத்தெறிந்த பின் பார்த்தாள் / அது துடித்துக்கொண்டிருந்த உறவொன்றின் / மின்னற்கொடி என்பதை / வலிக்கும் ஒளித்துண்டு / குருதியின் மணம் பெருகி / இதயத்தை நிரப்பியது நினைவாய் / பிறகு / இதயத்தைக் கூசச் செய்யும் ஒளித்துண்டை / மறைத்து வைக்க முடியாமல் / காலம் முழுவதும் அலைந்து திரிந்தவள் / ஒருநாள் அப்படியேமின்னலாகினாள் / அந்த மின்னல்தான் / உங்களுக்குள்ளும் துடித்துக்கொண்டிருக்கிறது / அவளாய் / அழியாத காவியமாய் (9)*

என்று முடிக்கப்பெற்றுக் 'காவியம்' எனத் தலைப்பிடப்பட்டிருக்கிறது.

தொகுப்பின் முடிவுக் கவிதையாக, அமைந்துள்ள கவிதையின் தலைப்பு: ஞானமுகம்-

> *நாங்கள் ஒன்றாகவே உறங்கினோம் / நீண்ட வழிகளில் ஒன்றாகவே நடந்தோம் / பசித்த வேளை சேர்ந்தே உண்டோம் / ஆறுகளைச்சேர்ந்தே கடந்தோம் / நீர்மட்டும் ஞானம் பெற்றதெப்படி? என்றபோது / புன்னகைத்தார் புத்தர் / இது வஞ்சனையற்றி வேறென்ன என்ற போது / புன்னகைத்தார் புத்தர் / அந்தப்புன்னகையே ஆயுதமும் சினேகமுமாயிற்று என்றென்றும் (128)*

முதல் கவிதைக்குள் இருக்கும் சொற்களின் வழியாகக் கிடைக்கும் காட்சிப்படிமங்கள் போர்க்காலக் காட்சிகளின் நம்பிக்கைகளும் அசைவுகளுமான "துடித்துக் கொண்டிருக்கும் உறவு, மின்னற்கொடி, வலிக்கும்ஒளித்துண்டு,குருதியின் மணம்,மின்னலாகுதல்" என்பதில் தொடங்கிக் கடைசிக்கவிதையில் "புத்தரின் புன்னகையை ஆயுதமாகவும் சினேகமுமாகவும்" பார்க்கும் மனநிலையில் முடித்திருக்கிறது. அது ஒருவிதத்தில் நீண்டகாலப் போர்நிகழ்வுகளும் அழிவுகளும் உருவாக்கிய ஞானம். இவ்விரு கவிதைகளும் ஏறத்தாழ போர்க்காலத்தின் தொடக்கத்தையும் முடிவையும் சுட்டுவனபோலவே அமைந்துள்ளன. இரண்டிற்குமிடையே பலப்பல போர்க்கால நிகழ்வுகளைக் காட்டும் கவிதைகள் வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. போர்க்காலச் செய்திகளில் அடிபட்ட வெள்ளைவான்,நினைவுப்பாடல், முள்ளிவாய்க்கால் 2017,காணாமல்போனவன்,மண்டேலாவின் காத்திருப்பு, மீட்பர், வித்தகன் எனத் தலைப்பிட்டு நேரடியாகவும், மறைமுகமாகப் போர்க்காலப்படிமங்களை உருவாக்கும் உக்கல், பறக்கும் கூடுகள், தோப்பின் கதை, இரண்டாவது பாவத்தின் கதை, கனவுகளைத் தின்ற இரவு, ஒளிகூடிய சொற்கள்,வேரற்றுப் போன காலம் எனத் தலைப்பிட்டும் போரையும்போர்க்காலத்தையும்நினைவுபடுத்துகின்றன கவிதைகள்.

நேரிடையாக ஈழப்போரின் பெரும் நிகழ்வுகளை - கொலைகளை நினைவூட்டும் ஒரு கவிதையை இங்கே வாசித்துப் பார்க்கலாம். அதன் தலைப்பு: ஆடுபுலியாட்டம் அல்லது அன்னுங்கையும் முள்ளிவாய்க்காலும்

> *எந்த வாய்ப்புக்கும் இடமளியாமல் / உன்னைக் கைவிட்டன எல்லா வியூகவளையங்களும் / காத்திருந்து செய்த சதியைப்போல / என்னையும் கைவிட்டன எல்லா அரண்களும் / நம்பிக்கை வேர்களை வெட்டியெறிந்து / சுற்றியிருந்த அரண்கள் அனைத்தையும் உடைத்து / உன்னை நெருங்கினேன் / சர்ப்ப வியூகம் சகட வியூகம் சக்கர வியூகம் / கருட வியூகம் மகரவியூகம் பத்மவியூகம் / பிரம்ம வியூகம் / என்றெல்லா வியூகங்களையும் நொருக்கி / என்னை நெருங்கினர் அவர்கள் / புகையிலைத்தோட்ட த்தில் / தனித்துத் தவித்த நீயோ / காடற்ற முயல் / கண்ணாப் பற்றையோரத்தில் / ஒற்றையாய்த் தனித்த நானோ / நீரற்ற மீன் / நம் பயணத்தின் இறுதிக்கணம் / இப்படி ஒருமை கொள்ளுமென / யார் கண்டார்?*




*தோழ, தோற்றது நம்விதி / தயவுடன் இறைஞ் சுகிறேன் / இக்கணத்திலேனும் எனை நம்பு / இந்தக் கண்ணாப் பற்றைகளிடம் கேள் / இக் கணத்தில் உன்னையன்றி / வேறெதையும் நினைத்த தில்லை தோழா! / அன்று அந்தப் புகையிலைச் செடிகள் / கொண்ட துயரையும் சீற்றத்தையும் / இந்த இறுதிப் பொழுதில் / என்னிடம் சொல்லியழுதன கண்ணாப்பற்றைகள்நம்மை நாமே தின்று முடித்தோம் / தோற்றது நம்விதி (62.63)*

இந்தக்கவிதையின் அடியில் தரப்பட்டுள்ள குறிப்பு, அந்தக்கவிதையின் பொருண்மைக்கான நம்பகத்தன்மையை உருவாக்குகிறது. அந்தக் குறிப்பு: அன்னுங்கை - இங்கேதான் தமிழீழ விடுதலை இயக்கத்தின் - டெலோ - தலைவர் புலிகளால் தனிமைப்படுத்திக் கொல்லப்பட்டார். முள்ளிவாய்க்கால் - இங்கேதான் தமிழீழ விடுதலைப்புலிகள் - எல்.டி.டி.இ. - தலைவர் வே.பிரபாகரன் இலங்கைப் படையினரால் தனிமைப் படுத்திக் கொல்லப்பட்டார். கருணாகரனின் போர்க்கால நினைவுகளையும் அதன் மீதான விமரிசனப் பார்வையையும் தரும் இன்னும் இரண்டு கவிதைகளை இங்கே தருகிறேன். முதல் கவிதையின் தலைப்பு: ஆயுதம்.

*யாரோ விட்டுச்சென்ற யோனி / தனித்துக் கிடக்கிறது கட்டிலில். / யாரதை விட்டுச் சென்றது / எதற்காகக் கைவிடப்பட்ட து ஒன்றுமே புரியவில்லை. / என்னைக் கண்ட தும் அது / எதையோ சொல்லத் துடித்து / சட்டெனத் தன் நினைவடுக்குகளில் / பதற்றத்துடன் இறங்கிச் சென்று / எதையோ தேடுகிறது*

*பார்த்துக்கொண்டிருக்கிறேன் / திறக்க முடியாத ஞாபகங்களை எடுத்து வந்து / மௌனமாக என் முன்னே / கண்ணீர் மல்க நிற்கிறது.*

*தானொருபயன்பாட்டுப்பொருளாகமாற்றப்பட்ட / துயரமாக இருக்கலாம்*

*உயிருற்பத்திச் சுடராக / இன்பக் குழலின் இனிய கீதமாக / உயிருறவாக / மர்மத்தின் தீராத புதிர்களையுடைய / அந்தரக் கண்ணாக எனப்பலவாக இருக்கும் / தன்முகவடிவை மாற்றியதைப் போல / கைவிட்டுச் சென்ற கணத்தை / அதனால் தாங்கிக் கொள்ள முடியவில்லை / விம்மி அழத்தொடங்குகிறது.*

*எந்த ஞாபகங்களையெல்லாம் அழிக்க விரும்பியதோ / அதெல்லாம் பெருக்கெடுத்து வந்து அதைச் சூழ்ந்தன. / இப்பொழுது அதை மறைத்து நின்றன / அதனுடைய ஞாபக முத்திரைகள் / நான் பார்த்துக் கொண்டேயிருக்கிறேன் / யாரோ ஒருவர் வந்து பொருத்திக் கொள்ள அவதிப்படுகிறார் / அது பொருந்த மறுத்துத் திணறுகிறது.*

*திணறிக்கொண்டேயிருக்கும் / அந்த யோனி யாருடையதென்று தெரியவில்லை / அந்தக் கணம் யாரோ ஒருத்திவந்து/அது தன்னுடையதானென்று / எடுத்துச் செல்ல மாட்டாளா / எனக்காத்துக் கொண்டிருக்கிறேன் / அவளால் தான் அதற்கு விடுதலையளிக்க முடியும்*

*யாரோ விட்டுச் சென்ற அது / தனித்தே கிடக்கிறது இன்னும் / அது தன் நினைவுகளை இழக்கட்டுமென்று / யாரோ ஒருத்தி காத்திருக்கிறாள். (84, 85)*

ஆயுதங்களை பெண்ணின் ‘யோனி’யாக உருவகப்படுத்திப் பேசும் கருணாகரன், யுத்தத்தைக் வேட்டைக்காடாக உருவகப்படுத்திக் காட்டுகிறார். அவ்வேட்டைக்காட்டில் வேடனும் அரசனும் இருக்கிறார்கள். இருவரும் ஒரேவகைத் தொழிற்பாட்டை மேற்கொண்டாலும் இருவருக்கும் வேறுபாடுகளும் இருக்கிறது என்று முன்மொழிந்து தனதுசார்பை-நிலைபாட்டைக்காட்டவும்செய்கிறார். இனி அந்தக் கவிதை: யுத்தம்

*அந்தக் காடுகளைக் கடந்துதான் வந்திருக்கிறான் / அரசனுக்கும்வேடனுக்குமிடையில்/வேறுபாடுகள் எதையும் நான் காணவில்லை*

*நலிந்து,/நகரமுடியாமல்,/மணலில்இறகிக்கரையும் துயரோடிருக்கும் / ஆற்றின் இடுக்கிலிருந்து*

*விடுபடத்துடிக்கும் / கூழாங்கற்களின் மீதுறங்கும் மீன்வாசனையை / அறிந்தவர்கள் ஆற்றினோரம் களைத்திருக்கிறார்கள் / அவர்களை விலகிச் செல்கிறான் அரசன்*

*பேரிருள் மூடிய மரங்களின் கீழே / ஆழ்ந்த உறக்கத்தில் படுத்திருக்கிறது நிழல் / மரமும் வளர நிழலும் வளர்ந்ததை / அறிந்தவர்கள் மரங்களைச் சூழ்ந்திருக்கிறார்கள்.*

*அவர்களை வந்தடைகிறான் வேடன் / குதூகலித்துப் புரண்டோடுகிறது மகிழ்ச்சி ஆறு / மிருகத்தின் வாசனையை மறைத்து வைத்திருக்கும் / மரங்களின் அடிவயிற்றில் / கனிந்திருக்கிறது மரத்தின் கருணையும் / மிருகத்தின் அன்பும்.*

*வேடனின் அன்பில் மலர்ந்திருக்கிறாள் வனத்தாய் / வனத்தின் அன்பில் கனிந்திருக்கிறான் வேடன் / இலையுதிரும் போதுணரும் வலியை வேடனும் / மலர்கள் உதிரும்போதுணரும் / துயர்ப்பெருக்கை மிருகங்களும் / கனிகள் சொரியும் மகிழ்ச்சியைப் பறவைகளும் / உணர / வனம் ஆழ்ந்து கதகதத்தது.*

*குதூகலித்துப் புரண்டோடிக்கொண்டிருக்கிறது மகிழ்ச்சி ஆறு / தன்னுறவுகளிடத்தில் மரம் நெகிழ்ந்து பெருகிக் கனியவே / வந்தான் அரசன் அங்கே.*

இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ள ஒவ்வொரு கவிதையும் போர்க்காலத்தை நினவுகொள்ளும் கவிதைகள் என்பதைத் தலைப்பிலேயே கொண்டிருக்கின்றன.

*காடதிர / கூட வந்த படைகளிடம் பிறந்த கலவரத்தீயில் / எரிந்தழிந்தன ஆறும் நிழலும் / ஆறும் நிழலுமற்றதோரிட த்தில் / ஏதொரு உயிருக்கும் இடமில்லையே / வேடனும் அரசனும் ஒன்றல்ல / ஒன்றேயல்ல என்றறிந்தேன் அப்போது. (122,123)*

இத்தொகுப்பில் உருவாக்கப்பட்டுள்ள மத்தியூ என்ற பாத்திரம் ஒன்றிற்கு மேற்பட்ட கவிதைகளின் தலைப்பாக ஆகியிருக்கிறது. அக்கவிதைக்குள் இருக்கும் மத்தியூ ஒருவராக இல்லாமல் பல்வேறு ஆளுமைகள் பற்றிய நினைவுகளாக எழுதப்பெற்றுள்ளது. மத்தியூ, மத்தியூவின் சிரிப்பு, மத்தியூவின் வருகை, மத்தியூவின் டயறி 01, மத்தியூவின் டயறி 02. மத்தியூ என்னும் கற்பனைப்பாத்திரத்தை முன்வைத்து விரிக்கும் நினைவுகள் தனியாகப் பேசப்படவேண்டியவை. இதுபோலப் பிடித்த கற்பனைப் பாத்திரங்களை / நினைவிலிருக்கும் பாத்திரங்களை உருவாக்கிய நகுலன் (சுசிலா) கலாப்ரியா (சசி) போன்றவர்கள் ஒரே நபரின் வெவ்வேறு சாயலைத் தந்திருக்கிறார்கள். ஆனால், கருணாகரன் மத்தியூவுக்குள் பலரை நடமாடவிட்டிருக்கிறார்கள். அதற்குக் காரணம் மத்தியூ புறநிலையில் பார்த்த மனிதர்களின் சாயல் என்பதுதான்.

## அகநிலையும் அகப்புறநிலையும்

தமிழ்க்கவிதை மரபில் காமமும் காதலும் மட்டுமே அகநிலை வெளிப்பாடுகள் அல்ல. கடவுளை அருகிருக்கும் நாயகனாகவும் நாயகியாகவும் பாவித்துப் பாடப்பெற்ற பக்திக்கவிதைகளும்கூட அகநிலையுணர்வின் வெளிப்பாடுகளே. கடவுளும் மனிதனும் ஒன்றுதான்; வேறுவேறல்ல என்ற அத்வைத நிலை தொடங்கி, இரண்டும் வேறுவேறு எனப்பேசும் துவைதா, ஜீவன் பரமாத்வை அடையும் வழிகளை விவரிக்கும் விசிஷ்டாத்வைதா வரை கடவுளை மனிதர்களின் அருகிலிருக்கும் வஸ்துவாக அல்லது பரம்பொருளாக நினைக்கின்றன. இந்நினைப்பின் நவீன வடிவமே உள்ளொளியாகவும் உள்ளுணர்வாகவும் நினைத்துக்கொண்டு அகவயமாகப் பேசும் மனநிலை. இம்மனநிலையில் எழுதப்படும் கவிதைகள் கேட்பவரை அருகிருக்கும் நபராக நினைத்துக்கொள்ளும் பாவனையைக் கைக்கொள்ள வேண்டும் என்பது முதல் நிபந்தனை. அண்மையிலிருக்கும் நபரோடு தனது அந்தரங்கத்தை - விருப்பத்தை - ரகசியத்தை - காதலை -காமத்தைப் பேசிவிடும் ஆசையின் நீட்சியாக அவை வடிவங்கொள்கின்றன. சில நேரங்களில் அந்தரங்கத்தைப் பொதுமைப்படுத்தும் தொனியைக் கைக்கொள்ளும்போது அகப்புறமாக மாறிப் பொதுநிலை வெளிப்பாடாகவும் ஆகிவிடுவதுண்டு. இத்தகைய கவிதைகளைக் கருணாகரனின் உலகின் முதல் ரகசியம் என்ற தொகுப்பில் ஏராளமாக வாசிக்க முடிகிறது. தொகுப்பின் தலைப்பாக இருக்கும் அந்தக் கவிதையே ஓர் அந்தரங்கத்தின் வெளிப்பாடுதான்.

*அவர்கள் வந்துவிட்டனர் / நானின்னும் வரவில்லை / அவளும் வந்துவிட்டாள் / நானின்னும் வரவில்லை / ஆனால், அவர்களுடனேயே நானிருந்தேன்.*

*அது ஒருசிறிய முற்றம் / பிறகு அதை வசதிக்கேற்றவாறு பெருக்கிக் கொண்டோம் / அங்கே ஒரு மரம் முளைத்துப் பழங்களை நிறைத்தது / பூக்களைச் சூடினாள் அவள் / வாசனையை உண்டாக்கினேன் நான் / தோட்டமும் முற்றமுமாகிய அந்த இடத்தில் / ஒரு படகின் வடிவத்தில் அமர்ந்திருந்தோம்*

*மெல்ல அசைந்தபடி நகர்ந்தன எல்லாம் / எல்லோரு கூடி / ஒன்றாகவே விருந்துண்டோம் / ஒன்றாகவே சேர்ந்து பாடினோம் / ஒன்றாகவே ஆடி மகிழ்ந்தோம் / இரவின் ஆழத்துள் சென்று / ஒன்றாகவே கனவுகள் கண்டோம்*

*அவள் என்னை முத்தமிட்டது மட்டும் / தனித்து நடந்தது / யாருமறியாத அந்த முத்தமே / ரகசியமாகியது இந்த உலகத்தில்*

*அவள் சென்றுவிட்டாள் / அவர்களும் சென்றுவிட்டனர் (21,22)*

மேலும் இரண்டு சிறுகவிதைகள். சுடர் என்னும் தலைப்பில்:

*நீ வருகிறாய் / நான் போகிறேன் / விடைபெறுதல் இல்லை / வழியனுப்புதலும் இல்லை / காலம் எப்படி நெருப்பாயிற்று / நான் எரிந்துகொண்டிருக்கிறேன் / நீயும் தான் எரிந்துகொண்டிருக்கிறாய் / நம்மை நாமே எரித்துக்கொண்டிருக்கும் நெருப்பாகினோம் (61)*

நெருப்பு என்னும் தலைப்பில்,

*இன்னும் பொழுதடங்கவில்லை / மாடுகள் பட்டியில் சேரவில்லை / கோழிகள் கூட டையவில்லை / மல்லிகை மலர்ந்துகொண்டிருக்கிறது / நீ இன்னும் வரவில்லை! / ஊற்றி வைத்த தேநீர் ஆறுகிறது / உடலும் மனமும் கொதிக்கிறது / முப்பதாண்டுகளாய் (67)*




அந்தரங்கமும் நெருக்கமும் குறைந்து பொதுநிலையான காட்சிகள், படிமங்கள், ஐயங்கள், களிப்பு மனநிலை போன்றனவற்றை முன்வைக்கும்போது அகப்புறக்கவிதைகளாக மாறுகின்றன. அப்படி மாறிய இரண்டு கவிதைகளை இங்கேவாசிக்கலாம்: முதல் கவிதை ஒரு பரவசநிலையை விவரிக்கும் மனப்பாங்கு கொண்ட வெண்பூனை வெண்ணிசை வெண்கிளிகள் என்று தலைப்பிட்ட கவிதை.

*இருளையும் ஒளியையும் இத்தனை அளவாக க்கலந்து / நம்முன்னால் வைத்துச் சென்றது யார்? / இந்தக் கணங்கள் இப்படியே இருக்க க்கடவது என்று/பிரார்த்திக்கிறது வெண்பூனை/தியானத்தில் / விழிமூடிச் சிரிக்கின்றன வெண்கிளிகள் / பரவசமா துயரிழைய அவிழ்தலா? / அமுதமாய்ப் பொங்கல் வழிகிறது / மூண்டெரியும் நெருப்பின் நடனத்தோடு / ஆற்றோரம் நடந்து செல்கிறாள் என்னுடைய கிளி / கிண்கிணி மணியொலிக்கத் / தலையசைக்கும் எருதுகளை அழைத்துக் கொண்டு / மரங்கள் அடர்ந்த சிற்றொழுங்கையில் போகும் / வெண்ராஜனைத் தொடர்கிறது வெண் பரிதி / ஒற்றைச் சுடராகி ஒளிரும் வெண்விளக்கை / நோக்கிக் குவிகிறதென் சிரசு (121)*

இரண்டாவது கவிதையின் தலைப்பு: தேவதேவனைச் சந்திக்கும்போது

*தேவதேவனைச் சந்திக்கும்போது கேட்க வேண்டும் / தொலைவிற்கும் அண்மைக்குமிடையில் / மேய்ந்துகொண்டிருக்கும் ஆடுகள் / உங்களிடம் சொன்ன ரகசியங்கள் என்ன என்று / அவர் அதைச் சொல்லாமல் / ரகசியமாகவே வைத்திருக்கவும் கூடும் / ஆனாலுமென்ன / நாம் கேட்பதிலொன்றும் தவறல்லவே / அவர் சொல்லாமல் விட்டாலும் கூடத்தான் (14)*

ஒரு கவியின் பிரியமான வாசகர்களுக்கு இப்படிக் கேட்பதற்குப் பல கேள்விகள் இருக்கும். ஐயங்களாகவும் ஆச்சரியங்களாகவும் கோபமாகவும் இருக்கக்கூடிய கேள்விகளைக் கருணாகரன், தேவதேவனிடம் கேட்கும் கேள்விகளாக மட்டுமே சுருக்கிவிட முடியாது. அவரைப்போலத் தேவதேவனிடம் கேட்கப் பலருக்கும் வினாக்கள் இருக்கலாம். தேவதேவனை வாசித்திருக்காத ஒருவருக்கு அவருடைய அந்தரங்கக் கவியிடம் அல்லது எழுத்தாளிடம் கேட்க வினாக்கள் இருக்கலாம். அதனை எழுதும்போது அகவெளிப்பாடாகவும் பொதுமைப்பட்ட நிலையில் புறநிலையாகவும் மாறிவிடும் நிலையில் அகப்புறமாகவும் ஆகிவிடும். உலகின் முதல் ரகசியம் தொகுப்பில் இவ்வகைக்கவிதைகள் பாதிக்கும் மேல் இருக்கின்றன.

## பின்குறிப்புகள் சில

கருணாகரனின் இவ்விரு தொகுப்பையும் ஒருசேர வாசித்துள்ள நிலையில் நூலாக்கம் பற்றிச் சில செய்திகளைக் குறிப்பிட வேண்டும். புறநிலைக் கவிதைகளாக எழுதப்பெற்றுள்ள நினைவின் இறுதிநாள் தொகுப்பில் உள்ள கவிதைகள் எழுதப்பெற்ற காலக்குறிப்பு தரப்பட்டிருந்தால், அதன் பொருண்மையும் எழுப்பும் உணர்வும் கூடுதலாகிவிடும். கருணாகரன் நினைத்திருந்தால் அதனைச் செய்திருக்கலாம். அதேபோல் உள்ளடக்க வரிசை தரப்பட்டிருக்கவேண்டும். புதுஎழுத்துப் பதிப்பகம் அதனை ஏன் தவிர்த்தது என்று தெரியவில்லை. புலம் பதிப்பகம் உள்ளடக்க வரிசையைத் தந்திருக்கிறது. ஆனால், அக்கவிதைகளைச் சில பொருண்மை அடிப்படையில் வகைப்பாடு செய்து தந்திருக்கலாம். அப்படியான வகைப்பாடுகள் வாசிப்பவர்களுக்கு உதவும் என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். பொதுவாகவே நவீனத்துவக் கவிகள் வாசகர்களுக்கு உதவக்கூடாது என்ற பிடிவாதத்தோடு செயல்படுபவர்கள். ஆனால், கருணாகரன் அப்படியானவர் அல்ல என்பதை நானறிவேன். அவரது மொத்தக் கவிதைகள் தொகுக்கப்படும் நிலையில் இவையெல்லாம் கணக்கில் கொள்ளப்படவேண்டும். ●

“அ. ராமசாமி” <ramasamytamil@gmail.com >

அரங்கசாமி நாயக்கர்

# ஒரு போராட்டக்காரரின் விருப்பம்

**பாவண்ணன்**

காந்தியடிகளால் 01.08.1920 அன்று தொடங்கப்பட்ட ஒத்துழையாமை இயக்கம் இரண்டாண்டுகளுக்கும் மேலாக நாடெங்கும் முழுவிசையுடன் நடைபெற்றது. முப்பதாயிரத்துக்கும் மேற்பட்ட தொண்டர்கள் அந்த அறப்போராட்டத்தில் கலந்துகொண்டு சிறைத்தண்டனையை ஏற்றுக்கொண்டனர். எதிர்பாராத விதமாக அப்போராட்டத்தில் உத்தரப்பிரதேசத்தில் சௌரிசௌரா என்னும் இடத்தில் 05.02.1922 அன்று வன்முறை வெடித்தது. மூன்று சத்தியாகிரகிகளும் இருபத்திரண்டு காவலர்களும் அன்றைய வன்முறைக்குப் பலியானார்கள். அதையறிந்து வேதனையுற்ற காந்தியடிகள் ஒத்துழையாமை இயக்கத்தை அக்கணமே நிறுத்தினார். பர்தோலி என்னுமிடத்தில் அவர் ஐந்துநாள் உண்ணாவிரதம் இருந்தார். நாட்டில் சிற்சில இடங்களில் நடைபெற்ற வன்முறைச் சம்பவங்கள் மெல்ல மெல்ல அடங்கி அமைதி நிலவத் தொடங்கியது. மோதிலால் நேரு, சித்தரஞ்சன் தாஸ் ஆகியோர் தலைமையில் காங்கிரஸிலிருந்து ஒரு பிரிவு விலகிச் சென்றது. காந்தியடிகளும் பிற தலைவர்களும் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டனர்.



குடல்வால் அறுவை சிகிச்சையின் பொருட்டு 1924ஆம் ஆண்டில் காந்தியடிகள் விடுதலை செய்யப்பட்டபோது நாட்டில் தேசபக்தி கொண்ட இளைஞர்களின் எழுச்சியும் அதிகரித்திருக்கும் கதராடைகளின் பயன்பாடும் அவருக்கு சற்றே ஆறுதலளித்தன. அதே நேரத்தில் பல இடங்களில் மதவேற்றுமையாலும் தீண்டாமையுணர்வினாலும் நடைபெற்ற கலவரங்கள் அவருக்கு ஆழ்ந்த துயரையும் அளித்தன. உடனே உடல்நலிவைக்கூட பொருட்படுத்தாமல் நாடெங்கும் பயணம் செய்து மத ஒற்றுமையை வலியுறுத்தியும் தீண்டாமையை எதிர்த்தும் பரப்புரை செய்யத் தொடங்கினார். பிளவுபட்டிருந்த காங்கிரஸ் பிரிவுகளுக்கிடையில் ஒற்றுமையை உருவாக்கினார். எதிர்பாராதவிதமாக அமேதி, சம்பல், குல்பர்கா ஆகிய இடங்களில் திடீரென நிகழத் தொடங்கிய மதக்கலவரங்களை நிறுத்தும் கோரிக்கையோடு 18.09.1924 அன்று தொடங்கி 21 நாட்கள் உண்ணாவிரதம் இருந்தார். மத ஒற்றுமையின் தேவையையும் முக்கியத்துவத்தையும் அனைத்துப் பிரிவினரும் உணரத் தொடங்கினர்.

காந்தியடிகள் தன் ஒவ்வொரு கட்டுரையிலும் உரையிலும் தீண்டாமையை உதறுவதும் மத ஒற்றுமையை வளர்ப்பதும் இந்திய சமூகத்தின் முன்னேற்றத்துக்கும் விடுதலைக்கும் உறுதுணையாக இருக்கும் என்னும் கருத்தாக்கத்தை முன்வைத்தபடியே இருந்தார். இச்சூழலில் 26.12.1924 அன்று பெல்காம் நகரில் முப்பத்தொன்பதாவது காங்கிரஸ் மாநாடு நடைபெற்றபோது, அதுவே பேசுபொருளானது. மாநாட்டுக்குத் தலைமை வகித்த காந்தியடிகள் அகிம்சை வழியிலமைந்த சத்தியாகிரகப் போராட்ட வழிமுறையின் முக்கியத்துவத்தைப் புரிந்துகொள்ளும்படி அனைவரையும் மன்றாடிக் கேட்டுக்கொண்டார்.

ஒத்துழையாமை இயக்கம் நிகழ்ந்த காலத்தில் நடைபெற்ற வன்முறைச் சம்பவங்களை நினைவுபடுத்தி, ஒரு தேசம் ஒருபோதும் வன்முறையை விலையாகக் கொடுத்து விடுதலையை ஈட்ட விரும்பக்கூடாது என அறிவித்தார். மதப்பற்று என்பது தேசப்பற்றைச் சுட்டெரிக்கும் சுடுகாடாகும் என்பதை மக்கள் புரிந்துகொள்ளவேண்டுமென்றும் இந்துக்களும் இஸ்லாமியர்களும் பாரத அன்னையின் இரு விழிகளாக விளங்குபவர்கள் என்றும் எடுத்துரைத்தார். தீண்டாமையை முற்றிலுமாக ஒழித்து தாழ்த்தப்பட்டோர் மேம்பாட்டுக்காக உழைப்பதும் தேசியப்பார்வையோடு விடுதலைப்போராட்டத்தை முன்னெடுத்துச் செல்வதும் ஒவ்வொரு தொண்டனும் மேற்கொள்ள வேண்டிய கடமைகளாகும் என்று தெளிவுபடச் சொன்னார் காந்தியடிகள்.

பெல்காம் மாநாட்டில் கலந்துகொள்வதற்காக காரைக்காலுக்கு அருகில் உள்ள இளையான்குடியிலிருந்து அரங்கசாமி நாயக்கர் என்பவர் சென்றிருந்தார். காந்தியடிகளின் ஒவ்வொரு சொல்லும் அவருடைய நெஞ்சில் அழுத்தமாகப் பதிந்தன. இயல்பிலேயே சமூகச் சீர்திருத்தத்தின் மீது நாட்டமும் தாழ்த்தப்பட்டோர் மேம்பாட்டின் மீது அக்கறையும் கொண்ட அரங்கசாமி நாயக்கரின் மனம் காந்தியடிகளின் உரையால் மேலும் எழுச்சியுற்றது. சொந்த ஊரில் ஏற்கனவே முன்னெடுத்திருந்த பல சீர்திருத்தச் செயல்களை இன்னும் விரிவான முறையில் செய்யவேண்டுமென அரங்கசாமி நாயக்கர் அன்றே முடிவெடுத்துவிட்டார்.



அரங்கசாமி நாயக்கரின் கனிவும் மனிதாபிமான உணர்வும் அவர் வாழ்ந்த வட்டாரத்தில் அனைவரும் அறிந்த உண்மைகள். இளையான்குடி பண்ணையின் வாரிசுகளில் ஒருவராகப் பிறந்து எல்லா வசதிகளோடு வாழ்ந்துவந்தாலும் இரக்கத்தின் உறைவிடமாக வாழ்ந்து வந்தார் அவர். அவருடைய இரக்க உணர்வு மேலும் கனிந்து மக்கள் அனைவரையும் நேசிக்கும் பண்பு படிந்ததற்கு இளமைக்காலத்தில் அவருடைய வாழ்வில் நடந்த ஓர் உண்மைச்சம்பவமே வழிவகுத்தது.

ஒருநாள் அவர் ஏதோ ஒரு வேலைக்காக காரைக்காலுக்குச் சென்று காளைகள் பூட்டப்பட்ட வில்வண்டியில் இளையான்குடிக்குத் திரும்பிக்கொண்டிருந்தார். அப்போது எதிர்பாராத விதமாக மழை பொழியத் தொடங்கியது. அப்போது மழையில் முழுமையாக நனைந்த ஒரு பிச்சைக்காரர் போக்கிடமின்றி ஒரு மரத்தடியில் சுருண்டு படுத்திருப்பதைப் பார்த்தார். அக்காட்சி அவருடைய மனத்தை உருக்கியது. அதைப் பார்த்த பிறகு, அந்த இடத்தைக் கடந்து ஓர் அடி தொலைவு கூட தன்னால் செல்லவியலாது என்பதை அவர் உணர்ந்தார். அக்கணமே வண்டியை விட்டிறங்கி அந்தப் பிச்சைக்கார்ருக்கு அருகில் சென்றார்.

எழுந்து நகரக்கூட உடலில் வலிமையின்றி காய்ச்சலில் முனகிக்கொண்டிருந்தார் அவர். தன் குடும்பத்தகுதி, செல்வாக்கு அனைத்தும் நாயக்கர் அக்கணத்தில் அவர் மனத்தைவிட்டு அகன்றன. உடனடியாக அப்பிச்சைக்காரரை எழுப்பி உட்கார வைத்து வண்டியோட்டியின் உதவியோடு தூக்கிவந்து வண்டியில் படுக்கவைத்தார். பயணத்தின்போது அவருடன் உரையாடி அவரைப்பற்றிய முழுவிவரங்களையும் தெரிந்துகொண்டார். அவர் மனத்தில் நம்பிக்கை பிறக்கும்வண்ணம் ஆறுதலான சொற்களைச் சொன்னார். இளையான்குடிக்குத் திரும்பியதும் அவருக்கு மாற்று உடை கொடுத்து அணியச் செய்து உணவுண்ண வைத்தார். பிறகு வைத்தியர் வந்து அவருக்கு மருந்து கொடுத்துவிட்டுச் சென்றார். சில நாட்களில் அவர் உடல்நலம் தேறி நடமாடத் தொடங்கினார். ஆயினும் அவரை வெளியே எங்கும் அனுப்பாமல் தன் பண்ணையிலேயே தங்கவைத்துக்கொண்டார் நாயக்கர்.

அப்போது பிரெஞ்சுக்காரர்களின் ஆட்சி நிகழ்ந்துகொண்டிருந்த காலம். அந்த ஆட்சியின் கீழ் புதுச்சேரி, மாஹே, ஏனாம், சந்திரநாகூர், காரைக்கால் ஆகிய ஐந்து பகுதிகள் இருந்தன. பிரெஞ்சுக்காரர்களின் ஆட்சியிலிருந்து விடுதலை பெறுவதற்கு முயற்சி செய்த ஆளுமைகள் பலர். அவர்களில் திருநள்ளாறைச் சேர்ந்த அரங்கசாமி நாயக்கர், காரைக்காலைச் சேர்ந்த பொன்னுத்தம்பி, லியோன் செயிண்ட் ழீன், சையத் அகமத், தங்கவேல் பிள்ளை, பழனூர், கோவிந்தசாமி செட்டியார், சி.காத்தபெருமாள் பிள்ளை, கிருஷ்ணமூர்த்தி ஐயர், ஆர்.ராமசீனிவாசன், எஸ்.கே.சுப்பராயன் போன்றோர் முக்கியமானவர்கள். இவர்களில் காந்திய வழியில் அறப்போராட்டத்தை முன்னெடுத்த தலைமுறையைச் சேர்ந்தவர் அரங்கசாமி நாயக்கர். காந்தியத்தின் மீதிருந்த ஈடுபாட்டின் காரணமாக அவர் வாழ்நாள் முழுக்க கதர் வேட்டியும் கதர்த்துண்டும் மட்டுமே அணிந்தார். தன் மனைவியும் பிள்ளைகளும் கூட கதராடைகளையே உடுத்தும் வகையில் மனமாற்றத்தை ஏற்படுத்தினார். இராட்டையில் தன் கைகளாலேயே தினந்தோறும்நூல்நூற்று, அந்தநூலை கதர்க்கடைகளில் கொடுத்து வேட்டி வாங்கி அணிந்துகொண்டார். பல ஊர்களுக்குச் சென்று மக்களுக்கு விழிப்புணர்வூட்டும் வகையில் உரையாற்றினார். அவர் வாழ்ந்த காரைக்கால் வட்டாரத்தில் அனைவருக்கும் தெரிந்த முகமாக விளங்கினார் நாயக்கர். அவருடைய கனிவான பேச்சும் அரவணைத்துக்கொள்ளும் அன்பும் மக்களைப் பெரிதும் ஈர்த்தன. அவருடைய வழியைப் பின்பற்றி பலரும் அவருக்குச் சீடர்களானார்கள். 'காரைக்கால் காந்தி' என்று பட்டப்பெயர் சூட்டி அரங்கசாமி நாயக்கரை அழைக்கத் தொடங்கினார்கள்.

1929ஆம் ஆண்டில் நடைபெற்ற தேர்தலில் திருநள்ளாறு நகராட்சியில் போட்டியிட்டு வெற்றிபெற்ற அரங்கசாமி நாயக்கர் மேயராகப் பொறுப்பேற்றுக்கொண்டார். அந்தப் பதவியின் அதிகாரத்தை மக்களுக்கு உதவும் வகையில் பயன்படுத்திக்கொண்டார் நாயக்கர். ஊரெங்கும் உள்ள சாலைகள் பழுதுபார்க்கப்பட்டன. குப்பைகள் அகற்றப்பட்டன. சுடுகாடுகளுக்கு புதிய பாதைகள் போடப்பட்டன. குளங்கள் தூர் வாரப்பட்டன. நீர்ப்பாசனத்துக்கு வசதியாக வாய்க்கால், வடிகால்கள் அமைக்கப்பட்டன. சாதி வேற்றுமையின்றி எல்லா வகுப்பைச் சேர்ந்த பிள்ளைகளும் சேர்ந்து படிக்கும் வகையில் ஓர் ஆரம்பப் பள்ளிக்கூடம் தொடங்கப்பட்டது. படித்த மாணவர்களும் பொதுமக்களும் பயன்படுத்திக்கொள்ளும் வகையில்

நகராட்சிக்குச் சொந்தமாக ஒரு நூலகத்தை உருவாக்கினார்.

பள்ளிக்கூடத்தையும் நூலகத்தையும் உருவாக்கிய பிறகு திருநள்ளாறிலேயே ஒரு மருத்துவமனையையும் உருவாக்கவேண்டும் என்ற எண்ணம் நாயக்கருக்குத் தோன்றியது. அதற்கு பிரெஞ்சு அரசின் அனுமதி தேவையாக இருந்தது. அரசுக்கு விண்ணப்பம் எழுதி அனுப்பிவிட்டு அவர் அனுமதிக்காகக் காத்திருந்தார். அனுமதி கிடைத்ததும் வேலையைத் தொடங்கிவிடும் வகையில் மருத்துவமனையை அமைப்பதற்கான பொருத்தமான இடத்தைக்கூட தேர்ந்தெடுத்து முடிவு செய்து வைத்திருந்தார். ஆனால் அவருடைய கோரிக்கையை அரசு ஏற்கவில்லை. நிதிச்சுமையைக் காரணமாகக் காட்டி நிராகரித்துவிட்டது. அந்தக் கடிதம் அவருக்கு ஏமாற்றத்தை அளித்தது. ஆனாலும் மனம் தளராத அரங்கசாமி நாயக்கர் நீண்ட யோசனைக்குப் பிறகு அரசுக்கு எவ்விதமான நிதிச்சுமையையும் அளிக்காமல் தன்னுடைய சொந்தப் பணத்தைச் செலவுசெய்து மருத்துவ மனையைக் கட்டுவதென முடிவெடுத்தார். உடனடியாக தன் முடிவை அரசுக்குத் தெரியப்படுத்திவிட்டு, அதற்கான அனுமதியை வேண்டி மீண்டுமொரு விண்ணப்பத்தை எழுதி அனுப்பினார். மருத்துவமனை இயங்கத் தொடங்கும் நேரத்தில் அங்கு பணியாற்றுவதற்காக மருத்துவர்களையும் செவிலியர்களையும் ஊழியர்களையும் மட்டும் அரசு நியமித்து உதவவேண்டும் என்றும் அதே விண்ணப்பத்தில் எழுதி அனுப்பிவைத்தார். அந்தத் திட்டத்தை அரசு ஏற்றுக்கொண்டது. உடனே கட்டுமான வேலையைத் தொடங்கிவிட்டார் அரங்கசாமி நாயக்கர். குறைந்த கால அவகாசத்தில் அவர் நினைத்திருந்தவண்ணம் எல்லா வசதிகளும் கொண்டதாக மருத்துவமனைக் கட்டடம் கட்டி முடிக்கப்பட்டது. அரசும் தன் சொல்லைக் காப்பாற்றும் வகையில் மருத்துவர்களையும் ஊழியர்களையும் நியமிக்க, மருத்துவமனை இயங்கத் தொடங்கியது.

காரைக்காலில் 1933 ஆம் ஆண்டில் அரிஜன சேவா சங்கத்தை கோவிந்த செட்டியார் என்பவருடன் இணைந்து அரங்கசாமி நாயக்கர் உருவாக்கினார். கிராமம்தோறும் சென்று தீண்டாமையை கைவிடும்படி மக்களிடையே உரையாற்றுவதும் நூல் நூற்பதன் முக்கியத்துவத்தை எடுத்துரைத்து ஒவ்வொருவரும் ஒவ்வொரு நாளும் நூல்நூற்கும்படி கேட்டுக்கொள்வதும் கதராடை உடுத்தும்படி பரப்புரை செய்வதும் அவர்களுடைய தினசரிப்பணிகளாக இருந்தன. தாழ்த்தப்பட்டோர் குடியிருப்புகளுக்கு நேரில் சென்று சுற்றுப்புறத் தூய்மையின் முக்கியத்துவம் பற்றியும் மது அருந்துவதால் ஏற்படும் தீமைகளையும் எடுத்துச் சொல்லி அவர்களுடைய மனமாற்றத்துக்கு வித்திட்டார்.

தீண்டாமை ஒழிப்பின் அடையாளமாக அரங்கசாமி நாயக்கர் ஒருமுறை சமபந்தி போஜனத்துக்கு சேத்தூர் பண்டாரவாடையில் ஏற்பாடு செய்திருந்தார். அனைத்து மக்களும் சாதிமத பேதமின்றி தாழ்த்தப்பட்டவர்களுடன் அமர்ந்து உணவுண்டனர். நாயக்கரும் அவர்களோடு அமர்ந்து உணவுண்டார். பின்னர் காரைக்கால் கொத்தளம்பேட்டை என்னும் கிராமத்தில் சமபந்தி போஜனம் ஏற்பாடு செய்யப்பட்டது. பல்வேறு நெருக்கடியான வேலைகளுக்கு இடையிலும் இப்படி தொடர்ச்சியாக ஒவ்வொரு கிராமத்திலும் சமபந்தி போஜனம் செய்வதையும் தீண்டாமைப் பிரச்சாரத்தில் ஈடுபடுவதையும் தம் கடமைகளெனக் கருதி செயலாற்றி வந்தார்.

ஒருமுறை தாழ்த்தப்பட்டோர் குடியிருப்புக்கு நாயக்கர் சென்றிருந்த போது, அங்கிருந்தோர் அனைவரும் அவரை உள்ளன்போடு வரவேற்று தம் வீட்டுக்கு உணவருந்த வருமாறு அழைத்தனர். அனைவரும் அவரைத் தனக்கு நெருக்கமான மனிதராகவே கருதினர். புன்னகையோடு அனைவருடைய அழைப்பையும் அவர் ஏற்றுக்கொண்டார். ஆயினும் ஒரே சமயத்தில் எல்லோருடைய வீட்டிலும் சாப்பிடுவது சாத்தியமில்லை என்பதால், அனைவரையும் மகிழ்விக்கும் விதத்தில் ஒவ்வொருவர் வீட்டிலிருந்தும் ஒரு பாத்திரத்தில் நீராகாரத்தை எடுத்துவரச் செய்து, எல்லாவற்றையும் ஒரு பெரிய பாத்திரத்தில் ஊற்றை நிரப்பச் சொல்லிவிட்டு, இறுதியில் அதிலிருந்து ஒரு சொம்பு நீராகாரத்தை எடுத்து அருந்தினார்.

இயல்பிலேயே மக்கள் அனைவரும் சமமெனக் கருதக்கூடிய நாயக்கர் சாதி வேறுபாடின்றி எல்லோரும் வந்து போகுமிடமாகவும் சந்தித்து உரையாடும் இடமாகவும் தன் வீட்டை வைத்திருந்தார். தாழ்த்தப்பட்டவர்களுடன் கோவில்களில் ஆலயப்பிரவேசம் செய்வதுபோல, எல்லோரும் சமமென்ற உணர்வுடையவர்கள் அனைவரும் தத்தம் வீடுகளுக்கு, தாழ்த்தப்பட்டவர்களை அழைத்து கிரஹப்பிரவேசம் செய்து அவர்களோடு சேர்ந்து உணவுண்ணும் பழக்கத்தை மேற்கொள்ளவேண்டும் என்று அனைவரையும் உற்சாகப்படுத்தினார். எல்லோருக்கும் எடுத்துக்காட்டாக, தாழ்த்தப்பட்டோர் குடியிருப்புகளிலிருந்து மக்களை அவரே தன் வீட்டுக்கு அழைத்துச்சென்று கூடத்தில் அமரவைத்து விருந்து படைத்தார். அவர்களோடு சேர்ந்து அவரும் உணவுண்டார்.

அரங்கசாமி நாயக்கரின் குடும்பம் செல்வவளம் மிக்கது. அதனால் அவர் தனது போராட்டங்களுக்கும் மக்களுக்கு உதவுவதற்கும் பணச்செலவுக்காக யாரையும் சார்ந்திருக்கவேண்டிய அவசியமில்லாமல் போனது. அதனால் அவரால் சுதந்திரமாக சிந்திக்கவும் செயல்படவும் முடிந்தது. அவரைத் தேடிவரும் தொண்டர்கள் எந்த நேரத்தில் வந்தாலும் அவருடைய வீட்டில் அவர்களுக்கு உணவும் தங்குமிடமும் உறுதியாகக் கிடைத்துவிடும். எந்த நேரமும் அவருடைய வீட்டில் பெரிய தவலைகளில் சாப்பாடு தயாராக இருக்கும்.

திருநள்ளாறு பகுதியில் வசித்துவந்த மக்கள் அனைவரும் அரங்கசாமி நாயக்கர்மீது அளவற்ற அன்பும் நம்பிக்கையும் வைத்திருந்தனர். அதனால் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டங்களில் மக்கள் தம்மிடையே உள்ள சில்லறை வழக்குகளை நாயக்கர் முன்னிலையில்

விவரிப்பது பழக்கமாகிவிட்டது. அவற்றை அக்கறையோடும் நேர்மையோடும் விசாரித்து தகுந்த தீர்ப்பை வழங்குவது நாயக்கருக்கும் பழகிவிட்டது. அதனால் பஞ்சாயத்து மன்றங்கள் ஒருவகையில் சின்ன நீதிமன்றங்கள்போல செயல்படத் தொடங்கின. எப்படியோ இச்செய்தி நீதிமன்றத்தின் கவனத்துக்குச் சென்றுவிட்டது. அதனால் அவரை நீதிமன்றத்துக்கே வரவழைத்த நீதிபதி "அதிகாரபூர்வமான நீதிமன்ற அமைப்பு இங்கே செயல்பட்டுக்கொண்டிருக்கும் சூழலில் மக்களின் வழக்குகளை நீங்கள் எப்படி விசாரித்து தீர்ப்பு சொல்லலாம்?" என்று கேட்டார். அதற்கு நாயக்கர் "குறைந்தபட்சம் பதினைந்தாயிரம் பேர் ஒருவரை தலைவர் என ஏற்றுக்கொண்டால், அவர் சில வரையறைகளுக்கு உட்பட்டு வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பு வழங்க சட்டம் இடமளிக்கிறது" என்று பொறுமையாக எடுத்துரைத்தார்.

அதைக் கேட்ட நீதிபதி "சட்டத்தின் எந்தப் பிரிவில் அப்படி கூறப்பட்டிருக்கிறது?" என்று கேட்டார். நாயக்கரும் நன்கு நினைவுகூர்ந்து வழக்கை விசாரிக்கும் உரிமையை வழங்கும் சட்டப்பிரிவின் எண்களைச் சொன்னார். உடனே நீதிபதி சட்டப்புத்தகங்கள் அடுக்கிவைக்கப்பட்டிருக்கும் புத்தகத்தாங்கிகளின் பக்கம் சென்று குறிப்பிட்ட புத்தகத்தைப் புரட்டிப் பார்த்துவிட்டு, நாயக்கர் சொன்ன பிரிவின்கீழ் அந்த உரிமைக்குறிப்பு இருக்கிறதா என்று தேடிப் பார்த்தார். நாயக்கர் உரைப்பது சரி என்று உணர்ந்தபிறகு வெளியே வந்தார். ஆழ்ந்த யோசனைக்குப் பிறகு "உங்களுக்குப் பதினைந்தாயிரம் பேரின் ஆதரவு இருக்கிறது என்பதை உங்களால் நிருப்பிக்கமுடியுமா?" என்று கேட்டு மடக்க நினைத்தார். அவரைப் பார்த்து புன்னகையுடன் "எந்த விதத்தில் நிரூபிக்கவேண்டும் என்று நீங்கள் சொன்னால், அந்த விதத்திலேயே நான் நிரூபிக்கிறேன்" என்று பதில் சொன்னார். அந்தப் பதிலை சற்றும் எதிர்பாராத நீதிபதி மௌனமாக அந்த இடத்திலிருந்து வெளியேறினார்.

ஹரிஜன சேவா சங்கத்தின் வேலைகளை ஊக்கப்படுத்தவும் ஹரிஜன மேம்பாட்டுக்கான நிதியைத் திரட்டுவதற்காகவும் 23.01.1934 முதல் தமிழ்நாட்டில் ஒரு நீண்ட பிரயாணத்தை காந்தியடிகள் மேற்கொண்டார். சென்னை, கோவை, மதுரை, கன்னியாகுமரி, திருச்சி என பல இடங்களுக்குச் சென்றுவிட்டு 15.02.1934 அன்று நாகப்பட்டினத்துக்கு வந்து சேர்ந்தார். அங்கு இயங்கி வந்த ஹரிஜன சேவா சங்கம் அவருக்கு நல்ல முறையில் வரவேற்பளித்து மக்களிடையே உரையாற்ற வைத்தது. அன்று இரவு காந்தியடிகள் நாகப்பட்டினத்திலேயே தங்கும் வகையில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. நாகப்பட்டினம் வரைக்கும் வந்துவிட்ட காந்தியடிகளை எப்படியாவது காரைக்காலுக்கு அழைத்துவந்துவிட வேண்டும் என விரும்பினார் அரங்கசாமி நாயக்கர். ஆனால் அவரிடம் சொந்தமாக கார் இல்லை. அதனால் தோமஸ் பிள்ளை என்பவரைச் சந்தித்து கார் கொடுத்துதவும்படி கேட்டுக்கொண்டார். அவர் மகிழ்ச்சியோடு தன்னிடமிருந்த கார் ஒன்றையும் காரோட்டியையும் அனுப்பிவைத்தார். தோமஸ் பிள்ளை பிரெஞ்சு ஆட்சியின் ஆதரவாளர் என்பது குறிப்பிடவேண்டிய ஒரு செய்தி. அரசியலில் எதிரும்புதிருமாக இருந்தாலும் அனைவரிடமும் நட்புணர்வோடு பழகும் குணமுள்ளவர் என்பதால் நாயக்கர் கேட்டதுமே அந்த வேண்டுகோளுக்கு இணங்கினார் தோமஸ் பிள்ளை.

காந்தியடிகளோடு நாகப்பட்டினத்திலேயே இரவில் தங்கிவிட்டு மறுநாள் காலையில் அவரை அழைத்துக்கொண்டு காரைக்காலுக்குப் புறப்பட்டார் அரங்கசாமி நாயக்கர். காரைக்காலில் உள்ள அரசலாற்றங்கரையில் உள்ள உப்புத்திடலில் திரண்டிருந்த மக்கள் காந்தியடிகளின் வருகைக்காகக் காத்திருந்தனர். காந்தியடிகளை நேரில் கண்டதும் அனைவரும் உணர்ச்சிவசப்பட்டு முழக்கமெழுப்பினர். புன்னகையுடன் அனைவரையும் வணங்கிவிட்டு மேடையில் அமர்ந்தார் காந்தியடிகள். அரங்கசாமி நாயக்கர் வரவேற்புரை நிகழ்த்தினார்.

"புனிதவதியார் தோன்றிய காரைக்காலுக்கு தாங்கள் வருகை புரிந்ததை ஒட்டி நாங்கள் அனைவரும் பெருமகிழ்ச்சியடைகிறோம். இந்திய மண்ணிலிருந்து ஆங்கிலேயர் ஆட்சியை அகற்ற அகிம்சை வழியில் நீங்கள் தொடங்கியிருக்கும் போராட்ட முயற்சிகளை ஒட்டி நாங்களும் பிரெஞ்சுக்காரர்களின் ஆட்சியை அகற்றும் முயற்சிகளில் இறங்கியிருக்கிறோம். ஹரிஜன முன்னேற்றத்துக்கும் தீண்டாமை ஒழிப்புக்கும் தங்கள் வழியைப் பின்பற்றி பிரெஞ்சிந்தியப் பகுதிகளில் விழிப்புணர்வை உருவாக்கப் பாடுபடுவோம். அந்த முயற்சிகளில் எங்களை அர்ப்பணித்துக்கொள்கிறோம்" என்று நீண்டதொரு வரவேற்புரையை வாசித்தளித்தார். அவரைத் தொடர்ந்து உரையாற்றிய காந்தியடிகள் அரங்கசாமி நாயக்கரின் நல்லெண்ணம் கொண்ட முயற்சிகளை வாழ்த்திப் பேசினார். அதைத் தொடர்ந்து "பிரெஞ்சுப் பேரரசின் அடிப்படைக் கொள்கைகள் சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகும். அப்படிப்பட்டவர்கள் ஆட்சி செய்யும் பகுதியில் இக்கொள்கைகள் எதுவும் நடைமுறையில் இல்லை என்பது வருத்தமளிக்கிறது. உங்கள் முயற்சிகளும் போராட்டங்களும் எப்போதும் அகிம்சை வழியில் அமையவேண்டும். இந்துக்களான அரிஜனர்களை இந்துக்களே தீண்டாமையின் காரணமாக ஒதுக்கிவைத்திருப்பது வேதனையளிக்கும் விஷயமாகும். இந்து சாஸ்திரங்களில் எந்த இடத்திலும் தீண்டாமை வலியுறுத்தப்படவில்லை. ஒரு பழக்கத்தின் காரணமாக ஏதோ ஒரு காலத்தில் எப்படியோ சமூகத்தில் வந்து படிந்துவிட்ட தீண்டாமையை மக்கள் நம்பவேண்டிய அவசியமில்லை. அது உடனடியாக உதறப்படவேண்டிய ஒன்றாகும். ஆகவே தீண்டாமையை ஒழிக்கவும் அரிஜன மக்கள் எல்லா நிலைகளிலும் முன்னேறவும் நீங்கள் பாடுபடவேண்டும்" என்று காந்தியடிகள் சுருக்கமாக உரையாற்றினார். நிகழ்ச்சியின் இறுதியில் அரிஜன மேம்பாட்டு நிதிக்காக காந்தியடிகளிடம் ஆயிரத்தொரு ரூபாயை நன்கொடையாக வழங்கினார் நாயக்கர்.

காரைக்காலின் பெருமையைப்பற்றி காந்தியடிகளிடம் பேசும்போது அரங்கசாமி நாயக்கர் அங்கு புதிதாக உருவாக்கப்பட்ட ஒரு சத்திரத்தையும் குளத்தையும் பற்றிச் சொன்னார். அவற்றை உருவாக்கியவர் காரைக்காலைச் சேர்ந்த சின்னசாமிப்பிள்ளை என்பவர். சாதி வித்தியாசமின்றி வழிப்போக்கர்கள் அனைவரும் தங்கி இளைப்பாறிச்

செல்லும் வகையில் அந்தச் சத்திரம் கட்டப்பட்டது. அதைப்போலவே சாதி வித்தியாசமின்றி அனைவரும் குளிக்கவும் தண்ணீர் எடுத்துச் செல்லவும் வசதியாக அந்தக் குளமும் வெட்டப்பட்டது. முற்றிலும் தீண்டாமை ஒழிக்கப்பட்ட இடங்கள் என்பதால் சத்திரத்தையும் குளத்தையும் காந்தியடிகளே திறந்துவைக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டார் அரஙகசாமி நாயக்கர். மறுப்பு சொல்லாத காந்தியடிகள் சின்னசாமிப்பிள்ளையின் தொண்டுள்ளத்தைப் பாராட்டிவிட்டு, சத்திரத்தையும் குளத்தையும் மகிழ்ச்சியோடு திறந்துவைத்துப் பேசினார். தன் வருகையின் அடையாளமாக அந்தக் குளத்தங்கரையில் அவரே ஓர் அரசமரக் கன்றை நட்டுவைத்தார்.

அந்த நிகழ்ச்சியைத் தொடர்ந்து சுரக்குடி என்னும் இடத்தில் வெட்டி முடிக்கப்பட்டிருந்த ஒரு பொதுக்கிணற்றையும் திறந்துவைக்க வேண்டுமென காந்தியடிகளிடம் அரங்கசாமி நாயக்கர் கேட்டுக்கொண்டார். ஆனால் நேரமின்மையின் காரணமாக அவர் விருப்பத்தை காந்தியடிகளால் நிறைவேற்ற முடியவில்லை. அடுத்தடுத்து பல நிகழ்ச்சிகளில் அவர் கலந்துகொள்ள வேண்டியிருந்தது. அதனால் நாயக்கரையும் பொதுமக்களையும் வணங்கி விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டுச் சென்றார் காந்தியடிகள். அவரை வழியனுப்பிவிட்டு தனியாக சுரக்குடிக்குச் சென்றார் நாயக்கர். காந்தியடிகள் சொன்ன சொற்களையே அங்கு காத்திருந்த பொதுமக்களிடம் எடுத்துரைத்தார். சூழலைப் புரிந்துகொண்ட பொதுமக்கள் "நீங்கள்தான் எங்கள் கண்முன்னால் நடமாடும் காந்தி. அதனால் நீங்களே கிணற்றைத் திறந்துவையுங்கள்" என்று கேட்டுக்கொண்டனர். நாயக்கரும் அக்கிணற்றைத் திறந்துவைத்தார். மக்கள் அக்கிணற்றை 'காந்தி கிணறு' என்று அழைக்கத் தொடங்கினர்.

அரிஜனக்குடியிருப்புகளில் நாயக்கருக்கு மெல்ல மெல்ல ஆதரவு பெருகியது. ஏனைய பிரிவினரும் அவரை நம்பிக்கைக்குரிய ஒரு தலைவராகக் கருதி அனைவரும் அவர் சொல்லுக்குக் கட்டுப்பட்டனர். தம் பகுதியில் அரிஜன நண்பர்களுடன் சேர்ந்து ஆலயப்பிரவேசம் செய்யவேண்டும் என்று அவர் நினைத்தார். தம் எண்ணத்தை நண்பர்களான இராமையா பிள்ளை, கிருஷ்ணமூர்த்தி ஐயர், கணபதி ஐயர், சாம்பசிவ ஐயர், சங்கர ஐயர், ஆத்மநாப ஐயர் ஆகியோருடன் கலந்துபேசி, நீண்ட விவாதங்களுக்குப் பிறகு தன் கருத்தை ஏற்றுக்கொள்ளவைத்தார். நண்பர்கள் புடைசூழ 1939ஆம் ஆண்டில் நாயக்கர் அரிஜனர்களை அழைத்துக்கொண்டு முதன்முதலாக சேத்தூர் சிவன் கோவிலுக்குச் சென்றார்.

சுற்றுவட்டாரத்தில் உள்ள ஒவ்வொரு கோவிலிலும் இத்தகு ஆலயப்பிரவேசங்களை அடுத்தடுத்து நிகழ்த்திய நாயக்கர் திருநள்ளாறில் உள்ள தர்பாரண்யேசுவரர் கோவிலுக்குள்ளும் ஆலயப்பிரவேசம் நிகழ்த்தவேண்டும் எனத் திட்டமிட்டார். ஆனால் காந்தியடிகளின் ஆணைக்கிணங்க, அது அனைவருடைய ஒப்புதலோடும் நிகழவேண்டும் என்பதால் கோவிலோடு தொடர்புடைய ஒவ்வொருவரோடும் மீண்டும் மீண்டும் பேச்சுவார்த்தை நிகழ்த்த வேண்டியிருந்தது. ஏறத்தாழ ஆறு ஆண்டுகள் இடைவிடாமல் அவர்களோடு விவாதித்ததன் பயனாக நாயக்கரின் விருப்பம் நிறைவேறும் காலம் நெருங்கிவந்தது. 01.12.1946 அன்று ஏறத்தாழ ஐந்நூறுக்கும் மேற்பட்ட தாழ்த்தப்பட்டவர்களோடு நாயக்கர் தர்பாரண்யேசுவரர் ஆலயத்துக்குள் சென்றார். பேதமின்றி அனைவரும் இறைவனின் முன்னால் நின்று வழிபட்டு மகிழ்ந்தனர். அன்று கோவில் திடலில் கூடியிருந்த மக்களிடையே நாயக்கர் எழுச்சி மிக்கதோர் உரையை நிகழ்த்தினார். விரைவிலேயே அவருடைய உரை பன்னிரண்டு பக்க பிரசுரமாக வெளியானது. அப்பிரசுரம் ஆலயப்பிரவேச காலகட்டத்தைச் சேர்ந்த முக்கியமானதொரு ஆவணமாக விளங்குகிறது.

மாதூரில் அவர் சொந்தமாக ஓர் அச்சகம் வைத்திருந்தார். சீர்திருத்தக்கருத்துகள் அடங்கிய துண்டுப்பிரசுரங்களையும் போராட்டம் பற்றிய தகவல்களையும் தன் அச்சகத்திலேயே அச்சடித்து அனைவருக்கும் வழங்கினார். மொழி ஆராய்ச்சியிலும் தத்துவ விவாதங்களிலும் வானியலிலும் அவருக்கு நல்ல ஆர்வமிருந்தது. பொறியியல் தொழில்நுட்பம் சார்ந்த பல நூல்களை சொந்தமாகப் படித்து தம் அறிவாற்றலைப் பெருக்கிக்கொண்டார் அவர். விவசாயத்துக்கு உதவும் வகையில் சில பொறியியல் கருவிகளைக் கண்டுபிடிக்கும் முயற்சியிலும் அவர் ஆர்வமுள்ளவராக இருந்தார். அரசியல் சீர்திருத்தக் கருத்துகளை மையமாகக் கொண்ட பல கட்டுரைகளையும் எண்ணற்ற இலக்கண, அறிவியல் ஆராய்ச்சிக் கட்டுரைகளையும் நாயக்கர் தொடர்ந்து எழுதினார். அவற்றை வெளியிடும் பொருட்டு குடியரசு, வித்தகம் என இரு வார இதழ்களை அவர் தொடங்கி நடத்தினார். மக்களிடையில் இவ்விதழ்களுக்கு நல்ல வரவேற்பு இருந்தது.

சமூக மாற்றம் தொடர்பான சீர்திருத்தக்கருத்துகளை மேடையில் எடுத்துரைப்பதோடு மட்டுமன்றி, தன் சொந்த வாழ்க்கையிலும் கடைபிடித்த மாபெரும் ஆளுமை அரங்கசாமி நாயக்கர். சாதி பேதமின்றி அனைவரும் சேர்ந்து நின்று இறைவனை வழிபடும் இடமாக ஆலயம் விளங்கவேண்டும் என்பதையும் சாதியைக் காரணமாகக் காட்டி தாழ்த்தப்பட்டவர்களுக்கு அந்த உரிமையை மறுப்பது மாபெரும் பாவம் என்பதையும் நாயக்கர் தனக்குக் கிடைத்த ஒவ்வொரு மேடையிலும் வாழ்நாள் முழுதும் முன்வைத்தபடியே இருந்தார். அதே நேரத்தில் ஆலயப்பிரவேசத்தை வெற்றிகரமாக நிகழ்த்திக் காட்டுவதோடு ஒருவருடைய சீர்திருத்தச் செயல்பாடுகள் முடிவடைவதில்லை என்பதை உரைக்கவும் அவர் ஒருபோதும் தயங்கியதில்லை. அந்த உணர்வு உள்ளூர ஊறிப் பெருகி, தாழ்த்தப்பட்டோர் ஒவ்வொருவரையும் பிற சாதியினர் வீட்டுக்குள் வர அனுமதித்து உரையாடும் சூழலையும் பிற சாதியினர் ஒவ்வொருவரும் தாழ்த்தப்பட்டோரின் வீட்டுக்குள் சென்று இயல்பாகச் சந்தித்து உரையாடும் சூழலையும் உருவாக்கவேண்டும் என்பதையும் அவர் தெரிவித்தார். அதுவே சாதி வேறுபாடுகளைக் களைவதற்கு நாம் எடுத்துவைக்கும் முதல் அடி என்பது நாயக்கரின் உறுதியான நம்பிக்கை. ●

**பாவண்ணன்** <paavannan@hotmail.com>

5ஆம் பக்கத் தொடர்ச்சி

தாக்குதல் உறுதியானவர்கள் சிகிச்சைக்கு அனுப்பப்பட்டனர். நோய்க்குறிகள் கடுமையாக இல்லாத நோயாளிகள் தனிமைப்படுத்தப்படும் மையங்களுக்கு அனுப்பப்பட்டனர். ஆரம்பத்தில் நோய்த் தொற்றுக்கும் அவர்கள் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு மருத்துவம் தொடங்குவதற்கும் 15 நாட்கள் இடைவெளி இருந்தது. விரைவில் அது வெறும் இரண்டு நாட்களாகக் குறைக்கப்பட்டது. இந்த நடவடிக்கைகள் மூலம் மக்கள் நேரடியாக நோய் பரப்புவதில் ஈடுபடுவது தடுக்கப்பட்டது. படிப்படியாக கொரோனா தாக்குதலிலிருந்து மீண்டு தற்போது மீண்டும் இயல்பு வாழ்க்கைக்குத் திரும்பிவிட்டதுசீனா. தனதுதொடக்கத்தவறுகளைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு இன்று உலக அளவில் கொரானோவை எதிர்கொள்ளும் செயல்பாட்டில் முன்னணியில் இருக்கிறது சீனா. இத்தாலி, ஈரான், செர்பியா உட்பட பல நாடுகளுக்கு வென்டிலேட்டர் கருவிகள், முகமூடிகள், 'ரெஸ்பிரேடர்'கள், முழுக் கவச உடைகள், சோதனை கருவிகள் சீனா கொடுத்துள்ளது.

இந்தியாவிலும் ஊரடங்கு, பாதிக்கப்பட்டவர்களை கண்டறிந்து தனிமைப்படுத்துதல் என நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. ஆனால், அதனை செயல்படுத்துவதில் இருந்த சிக்கல்கள் காரணமாக கொரோனா கிருமி பரவல் கட்டுக்குள் நிற்காததுடன், ஏற்கெனவே சிதைந்திருந்த பொருளாதாரத்தையும் சிதறச் செய்துவிட்டது.

மக்கள் ஒவ்வொருவரும் மற்றவர்களுடன் நேரடித் தொடர்பைக் குறைப்பதன் மூலமே கொரோனா பரவலைக் கட்டுப்படுத்த முடியும். பாதிக்கப்பட்ட ஒருவரிடம் இருந்து இரண்டு மீட்டர் தூரத்திற்குள் உள்ள ஒன்றிலிருந்து மூன்று பேருக்கு வரை கிருமி பரவ வாய்ப்புண்டு. எனவே, பாதிக்கப்பட்டவர்களும் கட்டுப்பாட்டுடன் இருக்க வேண்டும். ஆனால், இங்கோ நிலையோ தலை கீழாக இருக்கிறது. பாதிக்கப்பட்டவர்கள், மற்றவர்களுக்கும் பரப்புகிறோமே என்று எந்த பொறுப்பும் இன்றி கூட்டங்களில் நடமாடுகிறார்கள்.

ஆரம்பத்தில், அசைவ உணவுதான் கிருமி பரவ காரணம் என புரளிகள் புறப்பட்டன. இது தவறானது என நிரூபனம் ஆகிவிட்டது. மீன், கோழி, மட்டன், பீப் என வழக்கம்போல் அவரவர்கள் விருப்பத்திற்கேற்ப எதை வேண்டுமானாலும் உண்ணலாம். ஆனால், எதைத் தின்றாலும் சுத்தமான தண்ணீரில், நன்றாக சமைத்துச் சாப்பிடுங்கள். சமைத்த உணவில் கிருமி பிழைக்காது.

அதுபோல் காற்றில் பரவாது; வெய்யிலில் வராது; நிறைய தண்ணீர் குடித்தால் வராது; இளவயதினருக்கு வராது; கிராமங்களில் வராது; பூண்டு, இஞ்சி, மிளகு சாப்பிட்டால் வராது; நமது பாரம்பரிய மாற்று மருந்துகளில் குணமாகும் என நிறைய வதந்திகள் இப்போதும் உலவுகின்றன. இவை எதுவும் உண்மையில்லை. வெய்யிலாக இருந்தாலும், கொரோனா கிருமித் தொற்று உள்ளவர்கள் அருகிலிருந்தால், அவர்கள் தும்மும்போதும் துப்பும்போதும் காற்றில் இன்னொருவருக்குப் பரவும் என்பதை ஒரு கோடை காலம் நமக்கு உணர்த்திவிட்டது. வயது வித்தியாசமின்றி எல்லாரையும் கோவிட்19 தாக்கும். நகரம் கிராமம் என்ற வித்தியாசமும் அதற்குத் தெரியாது என்பதையும் உணர்த்திவிட்டது.

இப்படி ஒருவரிடம் இருந்து இன்னொருவருக்கு நோய் பரவுவது அந்த நாட்டுக்கு மட்டுமல்ல முழு மனித இனத்திற்குமே பேராபத்து. ஏனெனில், கிருமிகள் இதுபோன்ற சூழல்களைப் பயன்படுத்திக்கொண்டு பரிணாம வளர்ச்சி அடையும். கொரோனா போன்ற பறவைகள், விலங்குகளிலிருந்து மனிதர்களுக்குத் தாவும் கிருமிகள், தொடக்கத்தில் மனித உடலுக்குப் பொருந்தாத நிலையில்தான் இருக்கும். மனித உடலினுள் அவை பல்கிப்பெருகும் பொழுது, அவற்றின் மரபணுக்களில் மாற்றங்களை அடையும். இந்த மாற்றங்கள் அந்த கிருமியை மேன்மேலும் தொற்றக்கூடியதாகவும், மனித நோய் எதிர்ப்பு மண்டலத்தை எதிர்த்து நிற்கும் ஆற்றல் கொண்டதாகவும் மாற்றும். இவ்வாறாகத்தான் புதிய கிருமிகள் மக்களிடையே விரைவாகப் பரவத் தொடங்குகின்றன.

ஒரு தனிமனிதனின் உடலுக்குள் கோடிக்கணக்கான கிருமிகள் தொடர்ச்சியாக பல்கிப்பெருக முடியும் என்பதால், ஒவ்வொரு பாதிக்கப்பட்ட மனிதரின் உடலினுள்ளும், மனித உடலின் நோய் எதிர்ப்பு ஆற்றலுக்கு ஏற்றவாறு தன்னைத் தகவமைத்துக்கொள்ளும் முயற்சிகளில் ஈடுபடும். அதில் வெற்றிபெற்றால் கிருமி வெடித்துக் கிளம்பும்; தற்போது கொரோனா பரவுவதுபோல்.

எபோலா பாதிப்பு இப்படித்தான் நிகழ்ந்தது. எபோலா கிருமி வௌவாலிலிருந்து மனிதனுக்குத் தாவியபோது ஆரம்பித்தது. ஆரம்பத்தில் இது மனிதர்களுக்குக் காய்ச்சலை ஏற்படுத்தியபோதும், எபோலா கிருமிகள் பெருமளவில் வௌவாலின் உடலுக்கு தகவமைந்த ஒன்றாகவே இருந்தன. எனவே, மனிதர்களுக்கு மிக அரிதான நோயாகவே எபோலா இருந்தது. இந்நிலையில், தெற்கு ஆப்பிரிக்காவின் மகோனா மாகாணத்தை சேர்ந்த ஒரு மனிதருக்குத் தொற்றிய எபோலா கிருமியின் ஒரே ஒரு மரபணுவில் நடந்த மாற்றம் அதை மிக பயங்கரமான கொள்ளைநோயாக மாற்றியது. அந்த மரபு பிறழ்ச்சி எபோலா கிருமி ரகம் மனித செல்களின் கொழுப்பு கடத்திகளுடன் தன்னை பொருத்திக்கொள்ள வழிவகுத்தது. இதனால், கொழுப்பிற்குப் பதிலாக எபோலா கிருமிகள் செல்களுக்குள் இழுக்கப்பட்டது.

அதுபோன்ற ஒரு வாய்ப்பை இனிமேல் எப்போதும் எந்த ஒரு கிருமிக்கும் நாம் வழங்கிவிடக்கூடாது. உலகின் ஏதோ ஒரு மூலையில் ஏதோ ஒரு அபாயகரமான கிருமி இந்த எல்லைக்கோட்டைத் தாண்டினாலும் அது மனித இனத்திற்கே ஆபத்தாகும். உலகமெங்கும் கோடிக்கணக்கான மக்கள் இன்னமும் அடிப்படை சுகாதார வசதிகளின்றி வாழ்கின்றனர். இது அவர்களுக்கு மட்டுமல்ல வசதியானவர்கள் உட்பட அனைவருக்குமே ஆபத்து என்பதன் இறுதி எச்சரிக்கையே கொரோனா. நமது சுகாதாரத்துக்கும் சுத்தத்துக்கும் மட்டுமல்ல நம்முடன் இருப்பவர்கள் சுகாதாரத்துக்கும் சுத்தத்துக்கும் அதிக முக்கியத்துவம் கொடுப்போம். ●

# தெய்வங்களது தரிசனம்!

நடேசன்

## இலங்கை

*1970ஆம் வருடம்; எனது பத்தாவது வகுப்பு பரீட்ஷையின் முக்கியமான பாடங்களின் வினாத்தாள் முதல்நாள் இரவு கிடைத்தது. அதற்கான பதில்களை மற்றைய மாணவர்களிடமிருந்தும் புத்தகங்களைத் தடவியும் விடைகளை எடுத்தோம். அன்றைய இரவில் எம்மைப் பொறுத்தவரை அக்கால பிரித்தானிய சாம்ராச்சியம்போல் சூரியன் மறையவில்லை.*

வினாக்களிற்கான விடைகளை எழுதும்போது சிரித்தபடியே எழுதினேன். வகுப்புக்குப் போகாது சுற்றித்திரிந்த எனக்கு இப்படி ஒருவிடயம் நடக்குமென எதிர்பார்க்கவில்லை. என்னைத் தவிர மற்றைய மாணவர்கள் எல்லோரும் பக்திப் பழமாகத் விபூதி, சந்தனப்பொட்டுடன் தோற்றமளித்தார்கள். எனது நண்பர்களில், கடவுள் இருப்பதை நம்பியவர்கள் அன்று வினாத்தாள் கிடைத்ததை அதற்கான சாட்சியமாக நினைத்தார்கள்.



விடுதியில் இருந்தவர்கள், தீவுப்பகுதி மற்றும் கிளிநொச்சி முல்லைத்தீவு பிரதேசங்களைச் சேர்ந்தவர்கள். வினாத்தாள் வெளிவந்ததற்கு முருகன் ஐயனார், நாகம்மாள், வற்றாப்பளை அம்மன், வினாயகர் எனத் தங்கள் தரப்புத் தெய்வங்களை பொறுப்பாக்கினார்கள்.

இதில் முக்கிய விடயம் உயர் கணிதம் (Advance Maths) எனப்படும் கணித பாடத்திற்கு வினாத்தாள் கிடைத்தும், எனது நண்பர்கள் விடைகளைச் சொல்லித் தந்தும் என்னால் கிரகிக்க முடியவில்லை. காரணம், அந்த வகுப்பிற்கு நான் சென்ற நாட்களை கைவிரல்களில் எண்ணமுடியும். எனக்கும் ஆசிரியருக்கும் உள்ள உறவு நீதிபதிக்கும் தொழில்முறைத் திருடனுக்கும் உள்ள உறவுபோல்; தவிர்க்க முடியாத சந்திப்புகள் நடந்தாலும், அவற்றை இருவரும் பரஸ்பரம் பொருட்படுத்துவதில்லை. படிக்காத மத்தியூவின் கைபிடித்து தேவதை விவிலியத்தின் புதிய ஏற்பாட்டை எழுதியதாக ஒரு கதையுண்டு. அதேபோல் எழுவைதீவு முத்தன்காட்டு முருகன் எனது கையைப் பிடித்து எழுதியிருந்தாலும், அந்தப் பாடத்தில் பதில் எழுதியிருக்க முடியாது. அதனால், அந்தப் பாடத்தை எழுதும் நாள் கல்லூரிக்குப் போகாமல் மனோகரா தியேட்டரில் ஆங்கிலப் படம் பார்த்தேன்.

மார்கழி மாதத்து நாட்களில் இந்துக் கல்லூரியின் விடுதியில் பரீட்சை எடுக்கும் பத்தாம் தரமாணவர்கள் மட்டுமே இருப்பார்கள். மற்றைய வகுப்பு மாணவர்கள் விடுமுறையில் சென்றிருப்பார்கள். அதனால். எங்களுக்கு சமையல் செய்வதற்கு ஓரிரு சமையல்காரர் மட்டுமே நிற்பர். விடுதிக்குப் பொறுப்பானவர் மாலையில் ஆறு மணிக்கு யாழ்ப்பாண சந்தையில் வழமையாக காய்ந்து வதங்கிய விற்காத காய்கறிகளை மலிவு விலையில் வாங்குவது எமக்குத் தெரியும். அதுவும் குறைந்த எண்ணிக்கையினர் விடுதியில் இருக்கும் காலத்தில் மேலும் கொடுமையாக இருக்கும்.

வாடிய கத்தரிக்காய் முற்றிய வெண்டைக்காயில் உள்ள புழுக்களைத் தவிர அசைவமாக எதுவும் நாக்கில் படாத எங்களுக்கு, யாழ்ப்பாணத்து சைவக்கடைகளை ஏற்கமுடியவில்லை. இந்தக் காலத்தில் வெளியே சென்று உணவருந்த எமக்குச் சிறிது சுதந்திரமளித்திருந்தார்கள். இதனால், ஒவ்வொரு இரவுகளிலும் வெளியே சென்று சாப்பிட்டு வருவது எமது வழக்கம். இக்காலத்தில் மச்சம் மாமிசத்தைத் தேடுவோம்.

மீன்கடைகளை பார்ப்பதற்கு யாழ்ப்பாணம்



நகரைக் கடந்து போகவேண்டும். அவை எமக்குத் தூரமானது. எமக்கு அருகிலே இஸ்லாமியர்கள் நடத்திக்கொண்டிருந்த கடைகளே நடந்து போய் சாப்பிட்டு வர உதவியது. அதிலும் ஒரு கடை அக்காலத்தில் ஐந்து லாம்படி பகுதியில் இருந்தது. ஆரம்பத்தில் ஹமீதியா கபேயாக இருந்தது. அதனை மொக்கங் கடை என்போம். ஏதோ ஒருநாள் அங்கு பணத்தை குறைத்து வாங்கியதால் அந்தப் பெயர்ச் சொல்லில் அழைத்து, அந்தப் பெயரே பிற்காலத்தில் அதன் விளம்பரப் பலகையிலும் வந்தது. அங்கு தரப்பட்ட மாட்டுக் குருமா மூளை மற்றும் பிஸ்ரேக் என்பன எமது வாழ்க்கையில் கண்டதும் தின்றதும் அக்காலத்திலேதான்.

இப்படி உணவை ரசித்து வெற்றிகரமாகப் பரீட்சை எழுதி முடித்தபின், எழுதாத பாடத்தைத் தவிர மற்றைய பாடங்களில் ‘ஏ’ சித்தி வருமென நினைத்திருந்தேன். அதிக நாள் போகவில்லை. அந்தச் செய்தி எம்மை மரத்தில் கட்டிய பசுமாட்டைத் தாக்கிய இடியாக விழுந்தது. அந்தப் பரீட்சை ரத்துச் செய்யப்பட்டு மூன்று மாதங்களில் மீண்டும் தோற்றவேண்டும் என்பதே அச்செய்தி.

மீண்டும் பரீட்சை எழுதியபோது நான் எனது பரீட்சை முடிவைக்கூட பார்க்க விரும்பவில்லை. பரீட்சை முடிவுகள் வருவதற்கு முன்பாகவே வீட்டில் உள்ளவர்கள் எனது பிரச்சினைகளை முகர்ந்து பிடித்தார்கள்.

“விடுதியிலிருந்து இவன் உருப்பட மாட்டான்” என நினைத்த அவர்கள், என்னையும் அழைத்துக்கொண்டு குடும்பமாக யாழ்ப்பாணம் நோக்கிக் குடிபெயர்ந்தனர். இதுவரையிலும் பிறந்து வளர்ந்த ஊரான எழுவை தீவு அன்னியமாகியது. பரம்பரையாக வாழ்ந்த ஊரில் தபால் அதிபராக இருந்த அம்மா, தனது வேலையை விட்டுவிட்டு ஆறு பிள்ளைகளுடன் யாழ்ப்பாணத்திலிருந்து மூன்று மைல் தொலைவிலுள்ள கல்வியங்காடு என்ற இடத்திற்கு வந்து வாடகை வீட்டில் குடியேறினார்.

இதுவரை பாடசாலையில் இருந்து வாரமொரு முறை பஸ் ஏறி பின்பு வள்ளத்தில் கடல் கடந்து சென்றவன், இப்பொழுது சைக்கிளில் ஒவ்வொருநாளும் பாடசாலை போகவேண்டும். அக்காலத்தில் யாழ்ப்பாணத்தில் இரண்டு சைக்கிளாவது ஒரு வீட்டில் இருக்கும். அதுவும் ‘ரலி’ என்ற இங்கிலாந்து சைக்கிள் வைத்திருப்பவர்கள் பெருமைப்படுவார்கள்.

எனக்கு அதுவரையும் சைக்கிளோடத் தெரியாது. கல்வியங்காடு வந்தபின்பே சைக்கிள் ஓட்ட பழகினேன். அப்பொழுது பதினேழு வயது. கிட்டத்தட்ட நாற்பது வயதுக்குப்பின் திருமணம் முடிப்பதுபோல் கஷ்டமாக இருந்தது. விழுந்து விழுந்து விழுப்புண்களைப் பெற்று ஓடிப் பழகினேன்.

கல்வியங்காட்டு வந்ததும் புதிய நண்பர்கள் சேர்ந்தார்கள். அதைவிடச் சைக்கிள் எவ்வளவு தெய்வீகமான வாகனம் எனவும் புரிந்துகொண்டேன். இந்துக் கல்லூரி கிட்டத்தட்ட மூன்று மைல் தூரம். வழியெங்கும் பெண்கள் பாடசாலைக்குப் போவதற்காக கொத்துக் கொத்தாக வெள்ளை உடையுடன் பூத்திருப்பதையும் அவர்களை வழியனுப்ப அக்காமார், அம்மாமார், ஆன்ரிகள் வாசலில் நிற்பதையும் பார்த்ததும் அது புதுஅனுபவமாகியது. அதனால், எனது உடை மற்றும் முடியலங்காரங்கள் மாறின.

அக்காலத்தில் எனது ஆதர்ச நடிகராக தமிழ் நடிகர்கள் எவருமில்லை. ராஜேஷ் கன்னாவே இருந்தார். தலையை அவர் மாதிரியே வாரிவிட்டேன். மேலும், அக்காலத்திலே பெல்பொட்டம் எனப்படும் தரையை தழுவும் காற்சட்டையும் அணியத்தொடங்கினேன்.

## இந்தியா

சென்னை அமைந்தகரையில் ஒரு அடுக்கு மாடி வீட்டில் காசி விஸ்வநாதன் மாஸ்டர் மனைவியுடன் இருந்தார். மாஸ்டரும் மனைவியும் ஏற்கனவே என்னுடன் படித்த செல்வகுமாரின் பெற்றோர்கள் என்பதால் ஏற்கனவே அறிமுகமானவர்கள். அவர்கள் வீட்டில் பரந்தாமன் என்ற சிறுவயது நண்பன் எனக்கு ஞானம் என்ற பெயரில் அறிமுகப்படுத்தப்பட்டதுடன், ஈழமக்கள் புரட்சிகர முன்னணியின் முக்கியஸ்தராகவும் காசி விஸ்வநாதன் மாஸ்டரால் அறிமுகப்படுத்தப்பட்டார். என்னுடன் படித்தவர்கள் இப்படி அரசியல் முக்கியஸ்தர்களாக இருப்பது ஒருவிதத்தில் ஆச்சரியமளித்ததுடன், அந்த அறிமுகம் எனக்கு அதிர்ச்சியையும் தந்தது.

அதுவரையும் இயக்கம் என்பது எனக்கு தெரியாத - சம்பந்தப்படாதவர்கள் என்ற சிந்தனைதான் இருந்தது. நான் நினைக்கிறேன், பல மத்தியதர வகுப்பினருக்கு பொதுவானதாக அந்தச் சிந்தனை இருக்கும். 83 கலவரம் தூரத்துப் பச்சையாக இருந்த ஆயுதக் குழுக்களை தங்களவராக நினைக்க வைத்திருக்கும் எமது யாழ்ப்பாணத் தமிழ் மக்களுக்கு. ஆனால், நான் சிங்களப் பகுதிகளில் வேலை பார்த்தபடியால் அந்த எண்ணம் என்னைத் தொற்றிக்கொள்ள எனக்கு மனதில் நிழலாடும்.

காலங்கள் கடந்து நான் பல்கலைக்கழகம் போனபின் பரந்தாமனது தந்தையார் இறந்தார் என்ற தகவல் காதில் விழுந்தது. வாழ்க்கை என்ற இரயில் பிரயாணத்தில் வேறுவேறு திசைகளில் பயணப்பட்டதால் நாங்கள் பிற்காலத்தில் பல வருடங்களாக சந்தித்துக்கொள்ளவில்லை

மாஸ்டர் வீட்டில் சந்தித்த பரந்தாமனைக் கண்ட வியப்பிலிருந்து மீள்வதற்கு முன்னால் பரந்தாமன் என்னிடம், “உனது நண்பர் குண்சி என்பவர் இங்கே இருக்கிறார்” - என்றபோது இந்துக் கல்லூரியின் விடுதியில் இருந்த இடைக்காட்டைச் சேர்ந்த குணசேகரம் என்பவர் மனதில் வந்து சென்றார்.

அவரை நான் மதவாச்சியில் வேலை செய்யும் நாட்களில் ஒருநாள் யாழ்ப்பாணம் பேருந்து நிலையத்தில் சந்தித்தேன். அந்த மாலைநேரத்தில் தாடிவளர்த்த ஒருவர் கையில் சுரண்டியபோது திரும்பினேன். பார்ப்பதற்கு பிச்சைக்காரன்போல் தாடிவளர்த்து, தலையில் ஒரு டவலால் மொட்டாக்கிட்டபடி இருந்தார்.

என்னிடம், “எப்படி இருக்கிறாய்?” என்று கேட்டுவிட்டு பறந்துசென்ற பறவைபோல் மறைந்துவிட்டான். பின்பு யோசித்தேன் - அவன் வாழ்வு ஏதோ தலைமறைவு வாழ்வு போல் இருக்கிறது என்று.

**அக்காலத்தில் சிறை மீண்ட செம்மல் என்ற வார்த்தைகள் எனக்கு அடிக்கடி காதில் விழுந்தன. சங்கிலித்திருட்டில் யாழ்ப்பாணத்தில் சிறை சென்றவர்களும் தங்களை சிறை மீண்ட செம்மல்களாக காட்டிக் கொண்டார்கள். படித்த இளைஞர்களுக்கு எப்பொழுதும் யாழ்ப்பாணத்தில் மரியாதை இருந்தது.**

இந்தியா வரவேண்டியிருந்தது. ஒருவன் வாழும் சூழ்நிலை, அவனது சிந்தனை, கலாச்சாரம் மற்றும் பண்பாடுகளை உருவாக்குகிறது என்பது எவ்வளவு சரியானது என்பதை அத்தருணத்தில் உணர்ந்தேன்.

பரந்தாமன் ஒரு வித்தியாசமான மாணவனாக படிக்கும் காலத்தில் இருந்தான். யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியில் வேறு வகுப்பில் படித்தாலும் ஒரே தரத்தில்தான் இந்துக் கல்லூரியில் சேர்ந்தோம். பல வருடங்கள் பழகிய நட்பு. அக்காலத்தில் விடுதியில் இருந்தபோது எமது பொதுவான பொழுதுபோக்கு தமிழ் சினிமாப் படங்கள் பார்ப்பது. இதைத் தவிர அக்காலத்தில் முக்கிய நடிகருக்கு ரசிகர்களாக இருந்து அவர்கள் பற்றி பேசுவதும், அவர்கள் பற்றிய தகவல்கள் சேகரிப்பதும் எமது கல்லூரி வாழ்வில் முக்கிய அமம்சங்களாக விளங்கின.

நான் சிவாஜிகணேசன் ரசிகன். அதேபோல் பலர் எம்.ஜி. இராமச்சந்திரன், ஜெய்சங்கர் முதலானவர்களது ரசிகர்களாக இருந்தார்கள். ஆனால், அப்பொழுது ‘சாந்தி நிலையம்’ என்ற திரைப்படத்தில் சிறுமியாக நடித்த மஞ்சுளாவுக்கு ரசிகனாகவும் அந்த ‘சாந்தி நிலையம்’ படத்தை ஒன்பது தடவைகள் பார்த்தவனாகவும் இருந்த நண்பன் பரந்தாமன் மட்டும்தான். அதனால், அவன் வித்தியாசமான சினிமா ரசிகனாக எம்மிடையே அறிமுகமானான். எப்பொழுதும் பரந்தாமனை பார்க்கும் போது நடிகை மஞ்சுளாவின் உருவம்

“வேறு யார் நமக்கு தெரிந்தவர்கள்; நம்மோடு படித்தவர்கள் இங்கே இருக்கிறார்கள்?” புதிய இடத்தில் அறிமுகமானவர்களை தெரிந்துகொள்ளும் சாதாரண விருப்புடன் கேட்டேன்.

“குகன், ஹரிசந்திரா என்ற இந்துக் கல்லூரியில் படித்தவர்கள் இருவரும் புலியோடு இருக்கிறார்கள்.”

“அப்படியா ஹரிசந்திரா இயக்கத்தில் இருப்பான் என கற்பனை பண்ணமுடியாது எனக்கு.”

இப்படி பேசிக் கொண்டிருந்தபோது, “இரண்டு இளம்தாரியள் இருக்கிறீர்கள்” என்று எங்களை நோக்கி சொல்லிக்கொண்டு, ஒரு லீட்டர் பிளாக் அன்ட் வையிட் போத்தலை எங்கள் முன்பு வைத்தார் மாஸ்டர். அந்த போத்தில் மதுவோடு வேறு சில விடயங்களும் வெளியே வந்தன.

பரந்தாமன் ராணுவத்தால் பிடிக்கப்பட்டு ஜெயிலில் இருந்தது தெரியவந்தது. வாழ்க்கையில் பொலிஸ் ஸ்ரேஷனே போய் இராத எனக்கு இத்தகவல் பெரிய ஆச்சரியமாக இருந்தது.

நான் படிக்கும் காலத்தில் வண்ணை ஆனந்தன், மாவை சேனாதிராசா, காசி ஆனந்தன் போன்றவர்கள் சிறையில் இருந்து வெளியேவரும்போது, அவர்களுக்கு நடந்த வரவேற்புக் கூட்டங்களையும்

இரத்த திலகங்களையும் உணர்வு கொந்தளிக்க பார்த்திருக்கிறேன்.

அக்காலத்தில் சிறை மீண்ட செம்மல் என்ற வார்த்தைகள் எனக்கு அடிக்கடி காதில் விழுந்தன. சங்கிலித்திருட்டில் யாழ்ப்பாணத்தில் சிறை சென்றவர்களும் தங்களை சிறை மீண்ட செம்மல்களாக காட்டிக் கொண்டார்கள். படித்த இளைஞர்களுக்கு எப்பொழுதும் யாழ்ப்பாணத்தில் மரியாதை இருந்தது. பிற்காலத்தில் இப்படியான 'செம்மல்களால்' அந்தச் செல்வாக்கு சரிந்தது உண்மையே.

"அப்ப நமது பரந்தாமனும் சிறை மீண்ட செம்மல்தானே?"

"உனக்கு நக்கலாக இருக்கு. மேலும் சிலநாட்கள் நான் இருந்திருந்தா நான் வெலிக்கடையில் கொலை செய்யப்பட்டிருப்பேன்."

நான் கவலையடைந்த மனநிலைக்குப் போனேன்.

"நான் குட்டிமணி, ஜெகன் போன்றவர்களோடு சிறையில் இருந்தேன். 83 ஜுலை கலவரத்ததுக்கு சிலநாட்கள் முன்பாகத்தான் வெளியே வந்தேன். இருந்திருந்தால் நானும் அம்போதான்."

"அதுசரி குட்டிமணி, தங்கத்துரை முதலானோர் பிடிபடுவதற்கு பிரபாகரன்தான் காரணம் எனப் பலர் பேசுகிறார்கள். அதில் உண்மையுள்ளதா?" என்றபோது.

"இங்கே இந்த விழல் கதைகளை கதையாதீங்க" என்றார் மாஸ்டர்.

"குட்டிமணியும் தங்கத்துரையும் அப்படி நம்புகிறார்கள். மேலும் குட்டிமணி, "வெளியே சென்றபின் அந்த முழியனுக்கு நான் யார் என காட்டுகிறேன்" என கூறியதை எனது காதால் கேட்டேன்" என்று பரந்தாமன் சொல்லியபோது மீண்டும் மாஸ்டர், "இந்தக் கதைகளை விடுங்க. உறுதிப்படுத்த முடியாதவை" என்றார்

81ஆம் ஆண்டில் சித்திரை மாதம் தங்கத்துரை, குட்டிமணி ஆகியோர் கடற்கரையில் காத்திருந்த போது, அவர்களுக்கு பிரபாகரன் இந்தியா செல்ல படகோட்டியை ஒழுங்கு பண்ணுவதாக இருந்தது. அந்தப் படகோட்டிக்கு காத்திருந்த போது கைது செய்யப்பட்டதாக அரசல்புரசலாக சில கதைகள் யாழ்ப்பாணத்தில் உலாவின. ஆனாலும் மாஸ்டரின் வீட்டில் அவரது பிளக் அன்ட் வைட்டைக் குடித்துக் கோண்டு இதற்குமேல் கதைப்பது நாகரீகமில்லை என்பதால் அந்தப் பேச்சுகளை விஸ்கியுள் அமிழ்த்தினோம். மாஸ்டரின் மனைவி கொண்டு வந்த தோசையை சாப்பிட்டுவிட்டு அன்று இரவு அவரது வீட்டில் தங்கினேன்.

பரந்தாமன் என்ற ஞானத்தின் அழைப்பின் பேரில் எபிக் என்ற ஈழமக்கள் புரட்சிகர முன்னணியின் தகவல் நிலையத்திற்கு (EPIC) சென்றேன். சூளைமேட்டில் ஒரு கட்டிடத்தின் மேல்மாடியில் அது அமைந்திருந்தது. அங்கிருந்தவர்கள் இனிய முகத்துடன் தோழர் என வரவேற்றது மட்டுமல்லாமல் அன்று இரவு சாப்பாடும் தந்தார்கள்.

ஐந்து தமிழ், ஆங்கில பத்திரிகைகள், புத்தகங்கள் இருந்தன. இரண்டு மணிநேரம் அங்கு இருந்துவிட்டு வெளியே வந்தபோது வாசலில் நான் கழற்றிப்போட்ட செருப்பைக் காணவில்லை. மற்றவர்களது செருப்பை எடுக்கவும் மனமில்லாமல் வெறும் காலோடு ஆற்காடுரோட்டில் அரைக்கிலோ மீட்டர் சென்று புதிய இரப்பர் செருப்பை வாங்கி அணிந்துகொண்டு அறைக்கு வந்து சேர்ந்தேன்

செருப்பை பறி கொடுத்தாலும் தோழமையான அந்த இடம் என்னைக் கவர்ந்துவிட்டது. மேலும், எனது பால்யகால நண்பரான குண்சி - நீ எப்பொழுதும் இங்கு வரலாம் எனச் சொல்லியிருந்தார். அந்த இடத்தில் பேசுவதற்கு துணையும் வசிப்பதற்கு புத்தகங்களும் எனது முக்கியமான கவர்ச்சியாக இருந்தன.

சில இரவுகள் அங்கு இருக்கும் அழுக்கான தலையணைகளை போட்டுக்கொண்டு தரையில் படுத்துவிடுவேன். நடு இரவில் எழும்பியபோது தலைக்கு கீழ் இருக்கும் தலையணை காணாமல் போய்விடும். சுற்றியுள்ள சுவரில் உள்ள கார்ல் மார்க்ஸ், லெனின், ஸ்டாலின் உருவப்படங்கள் எப்பொழுது நீ கம்யூனிஸ்டாக மாறுவாய் என முறைத்தபடி என்னைப் பார்க்கும்.

என்னைப் பொறுத்தவரை கம்யூனிசத் தத்துவங்களை படித்தறிய முடிந்த இடம் அந்த எபிக்கேயாகும். அவுஸ்திரேலியா வரும்வரைக்கும், அக்காலத்திலே மாவோ, ஸ்டாலினை உலக வரலாற்றில் மாபெரும் கொலைகாரர்களாக இனம்கண்டு கொண்டாலும், லெனின் மீதும் கார்ல் மார்க்ஸின் பாலும் இளம்சிவப்பு அபிமானம் இருந்தது.

84ஆம் வருடம் வைகாசி மதிய வெயில்வேளை - நான் எபிக்கில் இருந்தபோது ரோட்டில் பெரிதாக சத்தம் கேட்டது. மாடிப்படிகளில் இறங்கி எபிக் கட்டிடத்திற்கு அருகே உள்ள சிறிய பாதையைப் பார்த்தபோது பல ஈபிஆர்எல்எவ் தோழர்கள் ஒரு முப்பது வயதான மனிதரை மொத்து மொத்தென அடித்தார்கள். அவன் அம்மே, அம்மே என சத்தமிட்டான்.

சிங்கள உளவாளி என சிலர் கூக்குரல் இட்டார்கள். எனக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. ஒரு மனிதனை பலர் அடிப்பதை பார்ப்பது இதுவே முதலாவது தடவை. ஒருவர் - அடிப்பதை நிறுத்திவிட்டு விசாரித்தபோது அந்த மனிதன் மலையாளி எனப்புரிந்தது. அவன் அம்மே என்றது இவர்களுக்கு

**என்னைப் பொறுத்தவரை கம்யூனிசத் தத்துவங்களை படித்தறிய முடிந்த இடம் அந்த எபிக்கேயாகும். அவுஸ்திரேலியா வரும்வரைக்கும், அக்காலத்திலே மாவோ, ஸ்டாலினை உலக வரலாற்றில் மாபெரும் கொலைகாரர்களாக இனம்கண்டு கொண்டாலும், லெனின் மீதும் கார்ல் மார்க்ஸின் பாலும் இளம்சிவப்பு அபிமானம் இருந்தது.**

அவனை ஒரு சிங்களவராக அடையாளம் காட்டியிருக்கிறது.

இந்தச் சம்பவத்தை அதில் பங்கு பற்றியவர்கள் மறந்திருக்கலாம். ஆனால், என்னால் மறக்கமுடியாத சம்பவம். அடிவாங்கிய அந்த மலையாளத்து மனிதன் மெதுவாக திரும்பி பார்த்தபடி நடந்து போனது - அடித்தவர்கள் அவனிடம் மன்னிப்புக் கேட்டது - அடித்த தோழர்கள் பலர் மனம்நொந்து பேசியது என்பன என்னால் மறக்கமுடியாத காட்சிகள்.

நல்லவேளை அப்பாவியான ஒரு சிங்களவர் அகப்பட்டிருந்தால் அவரது நிலை எப்படி இருக்கும் என்பதையும் அந்தக் கணத்தில் எண்ணிப் பார்க்கவும் மனம் தவறவில்லை.

ஒரு மாலை நேரம் சினிமாவுக்குச் சென்றுவிட்டு ஒரு நாள் எபிக்கிற்கு போனபோது மிகவும் தலையிடியாக இருந்தது. அங்கிருந்த தோழர்களிடம் தலைவலி மருந்து கேட்டேன். எல்லோரும் இல்லை என்று சொன்னார்கள். அப்போது ஆறடி உயரமான நெய்யில் வளர்ந்த செழிப்பான உடலுடன் ஒருவர் சிரித்தபடி வந்தார். எனது வயதுதான் இருந்தாலும் - அவரது உடலும் புன்னகையும் அவரை மதிப்புக்குரிய மனிதராக உயர்த்திவிட்டது.

இயக்கத்தவர்கள் எல்லோரும் மெலிந்தவர்கள். அதுவும் ஈழமக்கள் புரட்சிகர முன்னணியினர் நித்திய பஞ்சத்தில் வாழ்ந்தவர்கள் போன்ற தோற்றம் உடையவர்கள். மேலும் அவர்களுக்கு கிடைக்கும் உணவைத்தான் நான் பார்த்திருக்கிறேனே! நிச்சயமாக இந்த மனிதர் அவர்களில் ஒருவராக இருக்க முடியாது என்பதை எனது உள்ளுணர்வு சொல்லியது.

அந்த செழிப்பான மனிதர் இதோ நான் மருந்து தருகிறேன் எனக் கூறிவிட்டு ஏதோ வெள்ளைப்பசையை எடுத்து எனது நெற்றியில் சூடு ஏறத் தேய்த்தார். நானும் மனிதர் ஏதோ வைத்தியம் தெரிந்தவர் என நினைத்து அவர் தேய்த்தபின்னர் எனது அறைக்குச் சென்று படுத்துவிட்டேன். நிச்சயமாக தலையிடி குறைந்துவிட்டதாக உணர்ந்தேன்

அடுத்த நாள் நான் எபிக்கிற்கு சென்ற போது, குன்சி என்னை கையில் பிடித்து சமையல் அறைக்கு அழைத்துச்சென்று, "நீ கொஞ்ச நாளைக்கு இங்கு வரவேண்டாம்" எனச் சொன்னார். ஏன், எதற்கு என எதுவும் கேட்காமல் - நான் வெளியே வந்தபோது, முதல்நாள் நான் சந்தித்த அதே மனிதர் வந்து, "எப்படி தலையிடி?" என்றார் சிரித்தபடி.

"ஏதோ உங்கள் புண்ணியத்தில் இரவு தூங்க முடிந்தது."

"நான் உங்களுக்கு நெற்றியில் தடவியது சிக்னல் பற்பசை" என சிரித்துவிட்டு, "எனது பெயர் விசாகன்; யாழ்ப்பாணம் பல்கலைக்கழகத்தில் படித்தேன்" என அறிமுகமானார். அவருடன் அன்று அவரது பல்கலைக்கழக நண்பனான மகேஸ்வரராஜாவும் சேர்ந்து கொண்டார்.

எனது மனதில் எதற்கு என்னை வரவேண்டாம் என சொன்னார்கள் என்பது தலைக்குள் வண்டாக குடைந்து கொண்டிருந்தது. ஏதாவது ஓபரேசன் இலங்கையில் செய்யப்போகிறார்கள் என விசாகன் கோடி காட்டினார்.

ஏற்கனவே செல்வநாயகம் சந்திரகாசனோடு அவரது ஓஃபர் என்ற தன்னார்வத் தொண்டு நிறுவனத்தில் தான்வேலை செய்வதாகவும் அங்கு வந்து தனக்கு ஒத்தாசை செய்யும்படியும் காசி விஸ்வநாதன் மாஸ்டர் கூறியிருந்தார்.

அடுத்த நாள் எக்மோரில் உள்ள ஓஃபர் அலுவலகத்திற்குப் போன போது அங்கிருந்த மாஸ்டர், "ஏன் இவ்வளவு நாளும் வரவில்லை?" எனக்கேட்டார்.

"ஞானத்தின் ஆட்களோடு இடத்திற்கு (ஈழமக்கள் புரட்சிகர முன்னணியின் ஆபீஸ்) போய் வந்தனான்" என்றேன்.

"அவன்கள் சரிப்படான்கள். அவன் நாபா மட்டும்தான் நல்ல மனுசன். இவன்கள் தேவையில்லாத கம்யூனிசம் பேசிக்கொண்டு நேரத்தை வீணாக்குகிறார்கள். புலியளைப் பார் - அவர்கள் இந்த மாக்சிசம், கம்யூனிசம் என்று ஏதாவது பேசுகிறார்களா? அவங்களுக்கு தெரியும் சிங்களவருக்கு எங்கேயடித்தால் விடயம் நடக்கும் என்று" என்று மாஸ்டர் பேசிய விடயங்கள் புரிந்துகொள்ளக்கூடியதாக இருந்தன.

ஆனால், புலிகளின் போக்கு சரி என என்னால் எண்ண முடியவில்லை. என்னைப் பொறுத்தவரை ஆயுதப் போராட்டத்தை மறுக்க முடியாதபோதிலும், மனிதாபிமானமான விடயங்களில் ஈடுபடுவது சாலச்சிறந்தது என நினைத்தேன்.

"பேராதனை - கொழும்பு என பல்கலைக்கழகத்தில் இருந்து அரைவாசியில் படிப்பு முடியாமல் பல மாணவர்கள் இங்கு வந்துள்ளார்கள். அவர்களுக்கு தமிழ்நாட்டில் பல்கலைக்கழகத்தில் இடம் எடுப்பது சம்பந்தமான வேலையை நான் செய்கிறேன். அதுவிடயமாக கல்வி அமைச்சர் அரங்கநாயகத்தை நாளை சந்திக்கவேண்டும். அதற்கு நீ வருகிறாயா" எனக்கேட்டார் மாஸ்டர்.

அடுத்த நாள் கல்விஅமைச்சரை சந்திப்பதற்கு நான் தயாராகினேன்.

## அஸ்திரேலியா

வார்ணம்பூல் அக்காலத்தில் 20,000 மக்கள் வசிக்கும் தென் கடல் சார்ந்த நகரம். கோடைகாலத்தில், குறிப்பாக மார்கழி மாத விடுமுறையில் மக்கள் தொகை கடற்கரைக்கு வெயில் குளிக்க வருபவர்களால் இரண்டு மடங்காகும். கார்கள் மக்கள் எங்கும் நிறைந்து கலைந்த தேன்கூட்டை நினைவுபடுத்தும். மாறாக ஜூலை மாதத்தில் தென்துருவத்தில் இருந்து குளிரை முதுகில் தாங்கியபடி வீசும் காற்று எலும்புக்குள் சென்று புல்லாங்குழல் ஊதும். வீசும் காற்றின் ஓசை மட்டும் தாலாட்ட முழு நகரமே உறங்குவதுபோலத் தெரியும். நகரத்தின் உள்பகுதியான நிலங்கள் பசுமையான புல் தரையானதால் மாட்டுப்பண்ணைகள் அதிகமுள்ளது. ஆரம்பத்தில் அயர்லாந்திலிருந்து பஞ்சம் பிழைக்க வந்தவர்கள் குடியேறிய பகுதி.

மனைவி சியாமளா உதவி வைத்தியராக வார்ணம்பூல் வைத்தியசாலையில் பதவி எடுத்ததும் எனது தொழில் மாறிவிட்டது. சமையல் வேலையுடன் பிள்ளைகளைப் பராமரிக்கும் குடும்பத் தலைவனானேன். தங்குவதற்கு வைத்தியசாலைக்கு எதிரே ஒரு குவாட்டர்ஸ் தந்தார்கள். மிகவும் பாதுகாப்பான ஊர். வீட்டுக்கதவை திறந்து விட்டு பல மணிநேரம் எங்கும்போய் வரலாம்.

பிள்ளைகளைப் பாடசாலையில் விட்டுவிட்டு வார்ணம்பூலில் உள்ள மிருக வைத்தியசாலைக்குச் செல்வேன். அங்குள்ளவர்கள் எனக்கு அவுஸ்திரேலியாவில் மிருக வைத்தியத்தின் சூக்குமத்தை சொல்லித் தந்தார்கள். அங்குள்ளவர்களில் தலைமை வைத்தியர் டாக்டர் கமில்டனிடம், "நீதான் என் குரு" என்றேன்.

'குரு' என்ற வார்த்தையை அவன் ஏற்கனவே கேள்விப்பட்டிருந்ததால், "நன்றி நண்பா உன்னைப் பரீட்சையில் சித்தியடைய வைப்பது எனது பொறுப்பு" என்றான். அவனுடன் பண்ணைக்குச் செல்வேன்; பசு, குதிரைகளை பரிசோதிப்பேன்.

அங்குதான் உண்மையான அவுஸ்திரேலிய பண்ணை மற்றும் விவசாயியின் பௌதீக அமைப்பைப் புரிந்துகொண்டேன். சராசரியாக 400-500 பசு மாடுகளை 500 ஏக்கர் காணியில் வளர்ப்பார்கள். அங்குள்ள புல் நிலத்தில் அவை மேயும். காலையிலும் மாலையிலும் அங்குள்ள தொழுவத்திற்கு வந்து பால் தரும். பால் கறப்பது மெசினால் என்றாலும் ஒரு இலகுவான வேலையல்ல. வாரம் ஏழுநாளும் வேலையிருக்கும். தொடர்ச்சியாக புல்லை வளர்ப்பதுடன் வரட்சியான காலத்திற்கு புல்லை காயவைத்தும் பாதுகாக்கவேண்டும். கன்றுகள் போட்டால் அவற்றை பராமரிக்கவேண்டும். குடும்பத்தினரே சகலவேலைகளிலிலும் ஈடுபடுவார்கள். வெளியில் இருந்து எவரையும் வேலைக்கு வைத்திருக்க கட்டுப்படியாகாது. விடுமுறையிருப்பதில்லை. பெரும்பாலானவர்களிடம் அதிகமான சொத்துகள் நிலமாகவோ ட்ராக்ரராகவோ இருக்கும். ஆனால், அதிகம் பணமிராது. இதனால், பலர் பண்ணைகளை விற்று விடுகிறார்கள். அடுத்த தலைமுறை பண்ணை விவசாயம் செய்யத் தயாரில்லை. நகரத்தை நோக்கி இடம்பெயர்வதால் பெரும்பாலான விவசாயிகள் தலைநரைத்த மத்திய வயதைக் கடந்தவர்களே. பால் விலையேறுவது பின்பு குறைவது மற்றும் மழையற்ற வறட்சி போன்ற காரணிகள் அவர்களை கடன்காரர்களாக்கும்.

இதில் மிருகவைத்தியராக நான் அவதானிப்பது: பசுக்கள் குளிர்காலத்திலே கன்று போடும். அப்பொழுதுதான் அவை பால் கொடுக்கும். வசந்தகாலத்தில் அதிக புல்லுக்கிடைக்கும். ஒருமுறை நான் அதிகாலை நாலு மணியளவில் பண்ணைக்குச் சென்று பசு, கன்றைபோடுவதற்கு உதவியபோது அந்த குளிற்காற்றில் நான் நடுங்கியது இன்றும் நினைவிலிருக்கிறது.

இந்தக் காலத்திலே நான் பரீட்சைக்காக மீண்டும் மிருகவைத்திய புத்தகங்களைக் கரைத்துக் குடித்தேன். ஆறு மாதத்தில் எனது பரீட்சையை குவின்ஸ்லாந்து பல்கலைக்கழகத்தில் எடுக்க வேண்டியிருந்தது.

அந்தப் பரீட்சையின்போது மறக்க முடியாத இரண்டு சம்பவங்கள் நடந்தன. பல நாடுகளைச் சேர்ந்த பத்து மிருகவைத்தியர்கள் பரீட்சைக்கு வந்திருந்தார்கள். தொடர்ச்சியாக எட்டுப் பேருக்கு பேராசிரியரகள் நேர்முகப் பரீட்சை நடத்திக்கொண்டிருந்தார்கள். எனது முறை வரும்போது பரீட்சையை நிறுத்திவிட்டார்கள். நான் அந்தரப்பட்டேன். அவர்கள் எல்லோரும் நண்பகல் இரண்டு மணியாகியதும் மெல்பன் குதிரைப் பந்தயத்தை தொலைக்காட்சியில் பார்க்கச் சென்றுவிட்டார்கள்.

சம்பேயின் போத்தல்களை திறந்து சீஸ் கட்டிகளுடன் அருந்தினார்கள். அத்துடன் எனக்கும் பரிமாறினார்கள். என்னைப் பொறுத்தவரை அவுஸ்திரேலியாவுக்கு குடிபெயர்ந்து மூன்று வருடமும் ஐந்து மாதங்களுமாகி விட்டது. இந்தத் தேர்வு எப்பொழுது முடியும் எனக் காத்திருக்கிறேன். குதிரையோட்டத்தை பார்க்கவோ சம்பேயினை அருந்தும் மன நிலையிலோ நான் இல்லை. ஆனாலும் என்ன செய்வது?

**சிவகாசி கலண்டரில் பழனி முருன் படத்தின் மேல் எழுதிய வார்த்தைகள்போல் அவரது வாக்கு இருந்தது. தெய்வ நம்பிக்கையற்ற எனக்கு, அன்று அந்த ஆறரை அடி உயரமான பேராசிரியர் தெய்வமாகத் தெரிந்தார்.**

இரண்டு மணித்தியாலத்தின் பின்பு எனக்கு நேர்முகப் பரீட்சை நடந்தது. தலைமைப் பேராசிரியர் ரெக்ஸ் என்பவர் அடுத்தநாள் என்னைக் கண்டவுடன், "மகனே பயப்படாதே. நீ சித்திபெறுவாய். பரீட்சையில் உனக்கான நோயியல் மாதிரிகளில், (Pathological Specimens) இந்தியாவில் உள்ள நாய்களுக்கு வரும் நோயின் மாதிரியும் உள்ளது" என்றார்.

எனக்குப் புரியவில்லை. ஆனால், ஏதோ உதவ நினைத்து சொன்னதாக எண்ணி நன்றி சொன்னேன். பரீட்சையின்போது தெரிந்தது: இலங்கை, இந்தியாவில் தெருவில் திரியும் நாய்களுக்கு அவற்றின் ஆண் குறி / பெண் குறியில் குட்டைபோல் ஒருநோய்வரும். அவற்றை இலங்கையில் பார்த்திருக்கிறேன். அவுஸ்திரேலியாவில் அந்த நோய் இல்லை.

நன்றியுடன் நினைத்துகொண்டதுடன். இறுதிநாளில் நேரடியாக அவரிடம் கேட்டேன்: "எப்படிச் செய்தேன் என நினைக்கிறீர்கள்?"

"மகனே பயமற்று வீடு செல்" என்றார்.

சிவகாசி கலண்டரில் பழனி முருன் படத்தின் மேல் எழுதிய வார்த்தைகள்போல் அவரது வாக்கு இருந்தது. தெய்வ நம்பிக்கையற்ற எனக்கு, அன்று அந்த ஆறரை அடி உயரமான பேராசிரியர் தெய்வமாகத் தெரிந்தார்.

(தொடரும்)

நடேசன் <uthayam12@gmail.com>

# 1962 டைரிக் குறிப்பிலிருந்து..

## வைதீஸ்வரன்

**எப்போதோ எழுந்த விசாரங்கள்!**

நான் ஒரு குழந்தையிடம் கேட்டேன்: "நீ ஏன் அப்பாவை நேசிக்கிறாய்?"

"எங்க அப்பாதான் எனக்கு சட்டை பொம்மையெல்லாம் வாங்கித்தராங்க! அதனாலதான்" என்றது.

"நீ ஏன் அம்மாவை நேசிக்கிறாய்?"

"எங்க அம்மாதான் எனக்கு சாதம், பாலு எல்லாம் தராங்க!"

இதைவிட நேரான, எளிமையான, யதார்த்தமான பதிலை பெரியவர்களால்கூட சொல்ல முடியாது. இதே கேள்வியை பெரியவர்களிடம் கேட்டிருந்தால் பொய் சொல்லியிருப்பார்கள். அன்பு, பாசம், நேசம் என்றெல்லாம் வார்த்தைகளால் விளையாடி இருப்பார்கள். ஆனால், உண்மை குழந்தை சொன்ன பதிலில்தான் நிறைய இருக்கிறது.

ஒரு குழந்தைக்கு அப்பா இல்லை என்று வைத்துக்கொள்வோம். அந்தக் குழந்தைக்கும் சட்டை, பொம்மை எல்லாம் கிடைத்துவிடுகிறது. என்றாலும், "எனக்கு அப்பா இல்லையாம்மா? எனக்கு அப்பா வேண்டும்!" என்று கேட்கும்.

ஆக குழந்தைக்கு அப்பாவும் வேண்டியிருக்கிறது, பொம்மையும் வேண்டியிருக்கிறது!!!

பொம்மையும் வேண்டும் அதை வாங்கித் தர அப்பாவும் வேண்டும்! பொம்மை வாங்கித் தந்த நற்பணிக்காக அப்பாவை நேசிக்கவும் வேண்டும். ஆக குழந்தையின் அன்பு அப்பாவிடம் மட்டுமில்லை, பொம்மையிடம் மட்டுமில்லை. அப்பா - பொம்மை என்ற இரண்டு வளையங்களுக்கு நடுவே ஏதோ ஒரு இடத்தில் பதிந்து போயிருக்கிறது.

அந்த அன்பு எங்கே இருக்கிறது? ஏன் ஏற்பட்டது? அந்த இடத்தில்தான் மனிதப் பிராணிகளின் இயல்பான, தொன்மையான தற்காப்பு நிலை தெரிய வருகிறது.

டார்வின் ஆராய்ந்தறிந்த முடிவின் உண்மையை மேற்கூறிய குழந்தையின் இயல்பிலிருந்து ஊகிக்க முடியும்.தன்னைப் பாதுகாத்துக் கொள்ளவும் தன்னை துன்பங்களிலிருந்தும் அபாயங்களிலிருந்தும் மீட்கவும் தனக்கு சௌகரியங்களை உண்டாக்கித் தரவும் ஒரு சாதனத்தை தேடுகிறது குழந்தை.

அந்த சாதனமே முடிவில் அப்பாவாக முடிகிறது. அதுவே உயிரினங்களின் இடையறாத தொடர்ச்சிக்கு அணு சக்தியாக அமைகிறது.

**எப்படித் துதிப்பேன்?**

கோவில் சன்னிதியில் நின்றுகொண்டு, பக்தர்கள் தெய்வத்தை சேவிக்கும்போது நான் அவர்களையே பார்த்துக்கொண்டிருந்தேன். அந்த பக்த கோடிகளின் முகங்களைப் பார்வையிட்டேன். அத்தனை முகங்களிலும் ஏதோ இனமறியாத சோகம் கவ்விக் கொண்டிருந்தது. ஏன் என்று விளங்கவில்லை,

தெய்வத்தைத் தொழும்போது மனிதன் ஏன் வருத்தமாக தோன்ற வேண்டும்? துன்பத்தில் உழலுவதுபோல் கடவுளிடமே பாசாங்கு செய்துவிட்டு நிறைய புண்ணியங்களை அள்ளிக்கொள்ளலாம் என்று அசட்டு சாதுரியமா? அல்லது எதற்காக கோவிலுக்கு வந்தோம்? எதற்காக தொழுகின்றோம்? என்ற அடிப்படைக் கேள்விகளை - பக்தியினாலோ அறியாமையினாலோ - சரியாகப் புரிந்துகொள்ளாத குற்றத்தால் வழி தெரியாத குருடன் நிலையில் அலை மோதும் குழப்பத்தினாலா?

நான் எதை வேண்டுவது? எனக்கு என்ன வேண்டும்? நான் வேண்டினால் கிடைத்துவிடுமா? அது கிடைத்துவிட்டால் எனக்கு வேறெதுவும் வேண்டாமா? என்ற தீராத சந்தேகங்கள் க்ஷண நேரத்தில் புற்றீசல் மாதிரி கிளம்பி மடிந்த அயர்வுதான் முகத்தில் பிரதிபலிக்கிறதா?

நான் செய்வது பாபமா? புண்ணியமா? பாபம் எது? புண்ணியம் எது? நான் இதைச் செய்த காரணத்திற்காகத்தான் இதாக ஆனேனா? அப்படியானால் எதாக ஆவதற்கு எதைச் செய்ய வேண்டும் என்கிற தொன்மையான மனக் கிலேசங்களுக்குத் தீர்மானமான விடை தெரிந்துகொள்ள முடியாத ஜன்மத்தை எடுத்த மனத் தாபமா?

இவ்வளவு கேள்விகளும் எழாத மனநிலை நமக்குக் கிட்டிவிட்டால் நாம் கோவில் சன்னிதியில் மலர மலர சிரிக்க முடியும். கோலாட்டம் ஆட முடியும்! கவிதைகளைப் பொழிய முடியும். கடவுளை பயமில்லாமல் ஒரு சக நண்பனைப் போல் பார்த்து சம்பாஷிக்க முடியும்.

இப்போது என்னுடைய பிரார்த்தனை - அத்தகைய மனநிலை கிட்ட வேண்டும் என்பதுதான். ●

வைதீஸ்வரன் <vydheesw@yahoo.com>

# அட்சரா வெளியீடுகள்

















































**அட்சரா பதிப்பகம்**
12 கோவிந்த் ராயல் நெஸ்ட் அடுக்ககம், 2ஆவது குறுக்குத் தெரு, சிஐடி நகர் , 3ஆவது பிரதான சாலை
நந்தனம், சென்னை - 600035. தொலைபேசி: 94440 7000,